# உயிர் மாலை

காப்டன் என். சேஷாத்திரிநாதன்





உரிமை பதிவு] கலைமகள் காரியாலயம் [விலை ரூ. 1 8
மயிலாப்பூர் : : சென்னை-4

# முன்னுரை

தற்கால விஞ்ஞான சாஸ்திரங்களில் ஒன்றுன உயிர் நூல் என்பதன் நுட்பங்களை யெல்லாம் வெகு நன்ருகத் தெளிந்த நடையில், எல்லாரும் எளிதில் அறிந்துகொள் ளும்பொருட்டு, 'உயிர் மாலை' என்ற இந்தச் சிறிய நூலை, காப்டன் நீ. சேஷாத்திரிநாதன் எழுதியிருப்பது மிகவும் பாராட்டத்தக்கது.

சர்வ சிருஷ்டிகர்த்தா, சகல ஜீவராசிகளாகிய மலர் களையும் ஓர் ஆச்சரியமான கதம்ப மாலையாகத் தொடுத் தும், ஒவ்வொரு ஜீவ உடலையும் தொடர்புடையது ஆக் கியும், தானும் உயிருக்கு உயிராகப் பல்வேறு உயிர்களி லும் உலாவி நின்று, மாலையில் கயிறு போல் பிணித்து இயங்கும் தத்துவத்தை அறிந்தவர்கள், இந்த நூலுக்கு 'உயிர் மாலை' என்று இட்ட பெயர் மிகவும் பொருத்த முடைத்து என்பதைக் காண்பர்.

பஞ்சபூதச் சேர்க்கையால் உயிர்ப் பொருள் உண் டாகி, உயிர்த்து, உருப்பெற்றுப் பெருகிப் பெரிதாகி வாழ்ந்து, தன் இயற்கைக் கடனை ஆற்றி, தன் இனத் தைப் பெருக்கி, முதுமை அடைந்து, அழிந்து பழையபடி பஞ்சபூதங்களாகி, மாறிப் போவதும், புத்துயிர்களுக்கு மறுபடியும் சாதகமாகப் பயன்படுவதும் உயிர்ச் சக்கரத் தின் ஆச்சரியமான இயற்கை நியதி அன்ருே?

உயிரைப்பற்றிய பல ஆழ்ந்த கருத்துக்களை அந் நிய நாட்டு விஞ்ஞான நிபுணர்கள் அநேக நூல்கள் வாயிலாக வெளியிட்டிருக்கின்றனர். அவர்கள் எழுதி யிருக்கும் ஆராய்ச்சி நூல்கள் அநேகம். அவைகளின் சாராம்சத்தை ஒரு சிறு நூல் மூலமாகத் தமிழில் எழுதி உதவியதற்கு, தமிழ் மக்கள் இந் நூலாசிரியருக்கு மிக்க நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிருர்கள்.

இத் துறையைப் பின்பற்றிய இதுபோன்ற பல விஞ் ஞான விஷயங்களை விளக்கப் புது நூல்களை அவர் வரைய வேண்டும் என்றும் கோரவேண்டும்.

விஞ்ஞானக் கல்வியில் நமது தேசம் மிகவும் தாழ்ந்த ஸ்தானத்தில்தான் இருக்கிறது என்பதை மறுக்க முடி யாது. ஏனெனில், தாய்மொழியில் இதுவரை பாடங்கள் கற்றுக்கொடுக்கப்படவில்லை. விஞ்ஞான சாஸ்திரங்களை

ஆங்கிலத்தில் கற்றவர்கள், தாங்கள் கற்றதைத் தாய் மொழியில் ஆங்கிலம் கற்காத தங்கள் நாட்டு மக்களுக்கு எடுத்து உரைக்கும் திறமையற்றுச் சமீபகாலம் வரை இருந்தார்கள். அவர்கள் படிப்பு நாட்டுக்கு ஒரு பயனும் பயக்கவில்லை.

> "ஆங்கிலம் ஒன்றையே கற்ருர்; அதற்கு
> ஆக்கையோடு ஆவியும் விற்ருர்;
> தாங்களும் அந்நியர் ஆனார்; செல்வத்
> தமிழின் தொடர்பு அற்றுப் போனார்."

இது முற்றும் உண்மை என்பதை மறுக்க முடியுமா?

'பஞ்சபூதச் செயல்களின் நுட்பங்கள் கூறும் மேன்மைக் கலைகள் மெத்த வளருது மேற்கே; அவை தமிழினில் இல்லை' என்று சுப்பிரமணிய பாரதியார் புலம்பினார். எட்டுத் திக்கும் சென்று எல்லாக் கலைச் செல்வங்களையும் கொணர்ந்து, தமிழ்நாட்டில் சேர்க்கவேண்டும் என்று ஆணையிட்டார். விஞ்ஞான நூல்கள், தமிழில் சென்ற சில வருஷங்களாகத்தான் இயற்றப்பட்டு வருகின்றன.

உயர்தரப் பள்ளிக்கூடங்களிலும் கல்லூரிகளிலும் விஞ்ஞான நூல்களைத் தாய்மொழியில் போதிக்க வேண்டும் என்று அதற்கு வேண்டிய திட்டங்களை எல்லாம் அமைக்க ஆர்வம் கொண்டு முனைந்து நிற்கிருர் நமது மாகாணக் கல்வி அமைச்சர் திருவாளர் டி. எஸ். அவிநாசிலிங்கம் செட்டியார் அவர்கள்.

தாய்ப் பாஷைகளில் விஞ்ஞான நூல்களைக் கற்றுக் கொடுக்க முடியாது என்ற எண்ணம் பள்ளிக்கூட ஆசிரியர்களில் சிலருக்கு இருந்தால் அதை அவர்கள் கைவிட வேண்டும். இந்த 'உயிர் நூல்' அத்தகைய எண்ணத்தைத் தகர்க்கும் ஆற்றல் உடையது.

'உயிர் என்பது என்ன? எங்கே அதன் இருப்பிடம்? எப்படி ஓர் உயிர் மற்ருேர் உயிரைப் பிறப்பிக்கிறது? வம்ச பாரம்பரியம் எவ்விதம் ஏற்படுகிறது? பூர்வ ஜன்மம் உண்டா? பூர்வ ஜன்ம வாசனை, பூர்வ கர்மபலன் என்ருல் என்ன? வாழ்க்கையில் இன்ப துன்ப நிகழ்ச்சிகளின் தத்துவம் யாது? ஜனன மரணத் தொடர்பு ஏன்? முதுமை ஏன் வரவேண்டும்? சாவே இல்லாத உயிர்கள் உண்டா? சிரஞ்சீவித்வம் அளிக்கும் அமிர்தம் இல்லையா?

மானிட வாழ்க்கையின் எல்லே எவ்விதம் அமைகிறது? ஆயுளே நீடிக்க வகை எப்படி? உடலும் மனமும் எவ்விதம் பிணேந்திருக்கின்றன? பயம், வேதனே இவைகளின் தத்துவம் என்ன?' என்ற பல கேள்விகளுக்கு விளக்கமான விடை கொடுத்திருக்கிருர். இவையெல்லாம் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயங்கள்.

தம் வைத்திய அநுபவத்தில் கண்ட சிலருடைய வாழ்க்கைச் சம்பவங்களே இடையிடையே பொருத்தமாக ஆசிரியர் இணேத்திருக்கிருர். இடுக்கண் உடம்புக்கு இயல்பு; எனவே, இன்பம் தேடி அலேயும் மனிதன் துன்பத்தைப் பொறுத்தே தீர வேண்டும். வாழ்க்கையில் இன்பத்தை அநுபவிக்கவும், நோய்வாய்ப்படாமல் இருக்கவும், ஆயுளே நீடிக்கச் செய்யவும் துன்பம் இயற்கை நியதியில் அத்தியாவசியமானது என்ற விஞ்ஞான ஆராய்ச்சிக் கொள்கையைத் திறம்பட விளக்கியிருக்கிருர். வினே உடல் துன்பக்களன் என்று அறிந்து குறளாசிரியர் போதித்திருக்கும் உண்மையும் அதுதானே?

**'இலக்கம் உடம்பு இடும்பைக்கு என்று,**
**கலக்கத்தைக் கையாருக் கொள்ளாதாம் மேல்.'**

முதியோர்களின் சிறப்பியல்புகளே எடுத்துக்காட்டிக் கடைசியாக, '' 'இந்த உலகம் உயிருக்குச் சிறைச்சாலே அல்ல; இதை விட்டுத் தப்பி ஓடிப் போகவேண்டும்' என்று எண்ணுவது பயங்கொள்ளித்தனம்; திராணியற்றவர்கள், நெஞ்சில் உரம் இல்லாதவர்கள், நோய்வாய்ப்பட்டவர்கள் இவர்கள் மனத்தின் பலக் குறைவால்தான் அந்த எண்ணம் உண்டாகிறது; 'இறப்பதற்கு அன்று உயிர், வாழ்வதற்கே உயிர்' என்பது விஞ்ஞான ஆராய்ச்சியின் கொள்கை'' என்று அறுதியிட்டிருக்கிருர்.

இந்த அருமையான நூலே, ஆங்கிலம் கற்ற தமிழர்களும், ஆங்கிலம் கல்லாத தமிழ்ப் பண்டிதர்களும் பாமரர்களும், முக்கியமாகத் தமிழ்மொழி வாயிலாக 'உயிர் நூல்' கற்பிக்கும் ஆசிரியர்களும், தமிழ்நாட்டு மாணவர்களும் படித்துப் பயன் பெறவேண்டும். வயது முதிர்ந்தவர்களுக்கும் இந்நூல் நல்ல பயனேத் தரும். இல்லற வாழ்க்கையில் உழன்று, வாழ்நாட்களேக் குறைத்துக் கொள்ளாமல் இருக்கும்படி செய்யும்.

**டி. எஸ். திருமூர்த்தி.**

# முகவுரை

வேதாந்தத்தில் ஊறியதே நம்மவர் வாழ்க்கை. ஞானத்தின் அந்தமே வேதாந்தம். பல்லாயிரம் ஆண்டுகளாக ஞானிகள் ஞானக்கடலைத் தாண்ட ஓயாமல் முயன்று வருகிறார்கள். பிறவித் துன்பக் கடலைத் தாண்டுவதற்காக ஆரண்யகம், விவிலியம் முதலிய ஆதிக் கிரந்தங்கள் பல உபாயங்களைக் கூறுகின்றன. மனித சமூகம் இக்கிரந்தங்களில் கூறியுள்ள உபாயங்களைக் கையாண்டு, இவை வகுத்த நெறியிலே சென்று, முன்னேற்றம் அடைந்திருக்கிறது. ஆனால், மனித சமூகத்திற்கு உறுதி நிலை என்பதில்லை. ஆகையால், மானிட வாழ்க்கைக்குப் புதிய துன்பங்கள் நேரிடுகின்றன. அப்பொழுது மனித சமூகம் இந்த வாழ்க்கைக் கஷ்டங்களை நீக்கிக்கொள்ள, அடிக்கடி புதிய வழி வகைகளை நாடித் தேடுகிறது.

உடலும் மனமும் ஒன்றை ஒன்று சார்ந்திருக்கின்றன. ஆகையால், வாழ்க்கைத் துன்பங்களைத் தவிர்க்க உடல் ஆரோக்கியமாக இருக்கவேண்டும் என்பதோடு மனமும் ஆரோக்கியமாக இருக்க வேண்டும். மனமும் உடலும் சுகநிலையில் இருக்கவேண்டுமாயின், மானிட உயிரில் அடங்கியிருக்கும் சக்தியைச் சிக்கனமாகச் செலவு செய்து, மனித சமூகத்தின் தொகுதி-வாழ்க்கையையும் தனித்தனி அங்கங்களின் வாழ்க்கையையும் குறைவில்லாத நிறைவாகிய சம்பிரம வாழ்க்கையாகச் செய்துவிடவேண்டும்.

பண்படைந்த எந்தச் சாதியாரும் ஒரே நோக்கத்தை உடையவர்கள். உலகத்தில் உள்ள மானிடர் யாவரும் ஒரே தொகுதியாக அமைபவர்; மனிதன் தன் அங்கமாகவும் தொகுதியாகவும் செய்கின்ற கருமங்கள் அனைத்தும் மனித சமூகத்தின் பொது நன்மையைக் கருதியவைகளாக இருக்க வேண்டும்; அவ்வாறு இருந்தால்தான், பிற்காலத்தில் தோன்றப்போகிற சந்ததியார், க்ஷேமமாகத் தலைமுறை தலைமுறையாக வாழ முடியும் என்னும் சிந்தனையே அந்நோக்கத்திற்கு உயிர்.

மற்றவர்களைவிட வைத்தியர்களுக்கு விரைவிலே ஞானத் தெளிவடையச் சந்தர்ப்பங்கள் வாய்க்கின்றன. சுக துக்கங்களாகிற சூழ்நிலை அருட்டிகளுக்கு மனிதன்

எவ்வாறெல்லாம் இணங்குகிறுன் என்பதை ஆராய, வைத்தியத் தொழிலில் முனைந்து உழைக்கும் வைத்தியருக்குத் தருணங்கள் வாய்க்கின்றன. ஆகையால், ஆதிக் கிரந்தங்களில் மூழ்கிக் கிடக்காதபோதிலும், மனித வாழ்க்கை எவ்வாறு அமைந்தால் பிறவிப் பயன்களை எல்லாம் அநுபவிக்கலாம் என்று உரைக்கவும் அதற்கமைந்த வழியைக் காட்டவும் வைத்தியருக்கு உரிமை உண்டு. வைத்தியத் துறையிலே நெடுங்காலம் உழைத்ததன் பயனுக உள்ளத்தில் உதிக்கும் எண்ணங்கள், பிறருக்குப் பயன்படும் என்று கருதியே என் கட்டுரைக் கதம்பங்களுக்கு உயிர் மாலை எனப் பெயர் சூட்டி, நூலாக வெளியிடத் துணிந்தேன். இந்நூல் எழுத என்னைத் தூண்டிய நூல் ஆங்கிலத்தில் 'கென்னெத் வாக்கர்' என்பவர் எழுதிய 'உயிர் வட்டம்' எனப் பொருள்படும் 'ஸர்க்கில் ஆஃப் லைஃப்' என்பதேயாம். இந்நூலில் கண்ட பல விஷயங்கள் என் புத்தகத்திலும் சற்றே உரு மாறித் தோன்றுவன. இந்நூலை எழுத நான் கையாண்ட நூல்களின் ஜாபிதாவைக் கீழே குறித்துள்ளேன்.

1. **The Circle of Life** - Kenneth Walker.
2. **The Soul of the White Ant** - E. N. Marais.
3. **Problems of Aging** - Edited by E. V. Cowdry.

இந்நூலில் குறித்திருக்கும் திருஷ்டாந்தங்களில் தோன்றுகின்ற பெயர்கள் எனக்குத் தெரிந்த எவரையும் குறிப்பிடுவன அல்ல. இந்நூலை எழுதுவதற்கு அருந்துணையாக இருந்த நண்பர் சூடாமணிக்கு நான் நன்றி பாராட்டும் கடமை உடையேன். இதனைப் பிரசுரிக்க முன்வந்த கலைமகள் பிரசுராலயத்திற்கும் நன்றி பாராட்டுகிறேன். உபாத்தியாயரும், என் நண்பருமான டாக்டர் திருமூர்த்தி அவர்கள், இந்நூலுக்கு முன்னுரை எழுத மனமுவந்து இசைந்தார். அவருக்கும் நான் என்றும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளேன்.

சென்னை,
14-8-'46.

**நீ. சேஷாத்திரிநாதன்**

# பொருளடக்கம்




# உயிர் மாலை

## 1

## உயிர் என்றால் என்ன?

உயிர் என்றால் என்ன? இதை அறிவது கஷ்டமில்லை. என்றாலும், இதை விளக்கிக் கூறுவதுதான் கஷ்டம். ரசாயன சக்தி, உஷ்ணம், மின்சாரம், ரேடியோ இயக்கம் (Radio-activity) என்னும் சக்திகளும், இவை போன்ற வேறு பல சக்திகளும், நாம் வாழும் பூமண்டலத்திலும், எண்ணத் தொலையாத ஜோதி மண்டலங்களிலும் காணப்படுகின்றன. இந்தச் சக்திகள் எல்லாவற்றையும் ஒன்றாக இசைத்துக் கூட்டி அமைப்பதனால் ஏற்படுகிற சக்தி ஒன்றை உயிர் என்று ஒருவாறாகக் கூறலாம். இந்தச் சக்திக்கும், மற்றெல்லாச் சக்திகளுக்கும் அமைந்திருப்பது போன்ற ஒரு நடு நிலயம் தேவை. அந்த நடு நிலயந்தான் ஆதி-உயிர்-வஸ்து. இதை ஆங்கில பாஷையில் 'ப்ரோட்டோப்ளாஸம்' (Protoplasm) என்பார்கள்.

ப்ரோட்டோப்ளாஸம் என்ற வஸ்துவில் உள்ள ரசாயன மூலப்பொருள்கள் எவை என்பதை ஆராய்ந்து வெளியிட்டிருக்கிறார்கள். ப்ரோட்டோப்ளாஸத்தை அமைக்கிற ரசாயன மூலப் பொருள்களை எப்படியெல்லாம் ஒன்றாகக் கூட்டிச் சேர்த்தாலும், பிராணிகளில் இருக்கும் ப்ரோட்டோப்ளாஸம் ஆவதில்லை. உயிரற்ற பொருள் ஒருபோதும் உயிருள்ள ப்ரோட்டோப்ளாஸமாக மாற முடியாது.

பிராணிகள் இறக்கும்பொழுது அவற்றின் உயிர் எங்கே போகிறது? இறந்தபின் உடல் உடலாக இருப்ப தில்லை என்பதைப் பிரத்தியக்ஷமாகப் பார்க்கிறோம். உயிர் குடியிருக்கும் வீடாக அமைந்திருந்த சரீரம் பல வித உப்புக்களாகவும் வாயுக்களாகவும் நீராவியாகவும் பிரிந்துவிடுகிறது. உயிர் மட்டும் தனிமையாக இருக்க முடியுமா? உயிர் என்பதைச் சிந்திக்கும்பொழுது, உயிர் குடியிருக்கும் உடலைப்பற்றியும் சிந்திக்காமல் இருக்க முடியவில்லையே. இப்படி இருந்தும், மனிதர்கள், உயிரை ஆத்மா என்கிறார்கள்; உடம்பு வேறு, ஆத்மா வேறு; உடல் அழிந்தாலும், ஆத்மா அழிவற்ற வஸ்து; இது சரீரத்திலிருந்து பிரிந்த பிறகு பரமபதத்திற்குச் செல்லுகிறது; உலகத்தில் இருந்தபோது செய்த பாவ புண்ணியங்களின் பலன்களை அங்கே அநுபவிக்கிறது என்றெல்லாம் நம்புகிறார்கள்.

ஆத்மாவுக்கு இந்தச் சரீரத்திலே இருப்பிடம் எங்கே? மூளைச்சோற்றில் இருக்கிறதா? மூளைதானே சிந்திக்கும் யந்திரசாலை? ஆகையால், மூளையிலேதான் ஆத்மா இருக்கிறது என்று சிலர் கூறலாம். நாம் மனச் சாட்சியைக் குறிப்பிட்டுப் பேசும்போது, நமது மார் பைக் கையினால் தொட்டுக் காட்டிப் பேசுகிறோம். அளவு கடந்த பயம், சந்தோஷம், அல்லது கஷ்டம் ஏற்படும்போது, நம்முடைய இருதயம் அளவுக்கு மிஞ்சியோ குறைவாகவோ படபடக்கத் தொடங்கு கிறது. இதை நாம் கவனித்திருக்கிறோம். இருதயம் திடீரென்று நின்றுவிட்டால், மனிதன் உயிரை இழந்து விடுகிறான். இதனால் சிலர், 'ஆத்மா இருதயத்தில்தான் இருக்கிறது' என்று சொல்லலாம். ஒருவன் மிகவும் உயரமான இடத்திலிருந்து கீழே விழுந்தால், கழுத் தெலும்பு முறிந்து போகும். இந்த இடத்திலேதான் மெடுல்லா ஆப்லாங்கேட்டா (Medulla Oblangata) என்று கூறப்படும் மூளைச்சோற்றின் அடிப்பாகம்

இருக்கிறது. கழுத்தெலும்பு முறிந்தால், இதற்குச் சேதம் உண்டாகும்; ஒரே நிமிஷத்தில் உயிர் உடலை விட்டு அகலும். தூக்குத் தண்டனை பெற்றவனுக்கு மரணம் ஏற்படுவதற்காகக் கழுத்தெலும்பை முறிப்பதன் காரணமும் இதுவே. ஒரே கணத்தில் நோவொன்றும் தெரியாதபடி ஒருவன் உயிரிழக்கச் செய்யலாம். அப்படியானால், மூளைச் சோற்றில் உள்ள இந்த அம்சத்திலேதான் உயிர் இருக்கிறது என்று வேறு சிலர் கூறலாம்.

நடு வயிற்றில் முதுகெலும்புக்கு முன்பாக நரம்பு முடிச்சு ஒன்று இருக்கிறது. இதற்கு ஸோலார் ப்ளெக்ஸஸ் (Solar Plexus) என்று பெயர். நடு வயிற்றில் உதை கொடுத்தால், இந்த நரம்பு முடிச்சில் பட்டு உடனே மரணம் ஏற்படலாம். அப்படியானால், இந்த ஸோலார் ப்ளெக்ஸஸை உயிரின் ஸ்தானம் என்று சொல்லலாமா? ஒரு மனிதனுக்குப் பிராணன் இழுத்துக்கொண் டிருக்கிறது. அப்போது, இருதயமும் சுவாசப் பைகளுமே வேலைசெய்து கூடிய மட்டும் அவனைக் காப்பாற்ற முயல்கின்றன. மற்ற அங்கங்களும் அவயவங்களும் உயிரிழந்தவைபோல் இருக்கும். இந்தச் சந்தர்ப்பத்தில் உயிர் எங்கே இருப்பதாகச் சொல்லலாம்?

சில நோய்களினால் ஒருவனுக்குக் கை அல்லது கால் மட்டுமே ரத்த ஓட்டம் இல்லாமலும் உணர்ச்சி இல்லாமலும் இருந்துவிடலாம். அந்த அங்கத்தை உயிரிழந்த அங்கமென்றே சொல்லவேண்டும். பின்பு அது அழுகிக் கீழே விழுந்துவிடும். சரியானபடி சிகிச்சை செய்தால் மனிதனுடைய உயிருக்குக் கேடு வராதபடி அவனைக் காப்பாற்றிவிடலாம். இதன் தாத்பரியம் உயிரைப் பங்கிடலாம் என்பதுதானா?

பல்லியின் வால் அறுந்துவிட்டால் வால் மட்டும் தனியே சற்று நேரம் துள்ளிக்கொண் டிருக்கும்

அல்லவா? உயிரைப் பங்கிட முடியும் என்பதற்கு இதுவும் ஓர் உதாரணந்தானே?

கடலில் வாழும் சில பிராணிகளை இரு துண்டாக வெட்டினால் இரண்டு துண்டுகளும் தனித்தனி உயிர் நிலைகளாக, வளர்ந்து இரண்டு பிராணிகள் ஆகும். நட்சத்திர மீனைச் சுற்றிலும் கைகள் போன்ற அங்கங்கள் உண்டு. ஒவ்வொன்றையும் துண்டித்தால், ஒவ்வொன்றும் மற்றப் பாகங்களை வளர்த்துக்கொண்டு முழு நட்சத்திர மீனாக மாறிவிடும்.

மனிதனுடைய உடலைத்தான் எடுத்துக்கொள்வோம்: மனித உடல் கோடிக் கணக்கான நுண்ணிய ஜீவாணுக்களால் (Cells) அமைந்திருப்பதாக விஞ்ஞானிகள் தெளிவாகக் காட்டியிருக்கிறார்கள். இந்த ஜீவாணுக்கள் ரத்தத்தின் வழியாக வரும் உணவை உட்கொண்டு, வளர்ந்து, தத்தமக்குரிய காரியங்களை மூளையின் கட்டளைப்படி செய்து, மற்ற அணுக்களுடன் ஒத்துழைத்து வாழ்கின்றன. காலம் செல்லச் செல்லப் புதிய அணுக்களுக்கு இடம் கொடுத்து, மடிகின்றன. இந்தத் தர்மத்தை உடலின் அவயவங்களிலுள்ள ஒவ்வொரு ஜீவாணுவும் செய்து வருகிறது.

நரம்புகள் சிறிது அறுந்துவிட்டால், திரும்பவும் வளரலாம்! சர்மத்தில் காயம் பட்டால் சர்ம அணுக்கள் பரவிக் காயத்தை நாளடைவில் மூடி வரும். எலும்புகள் முறிந்தால் எலும்பணுக்கள் வளர்ந்து, ஒடிந்த எலும்பைச் சேர்த்துவிடும்.

மனித உடலில் அமைந்திருக்கும் ஒவ்வோர் அணுவையும் அணு தர்சினியின் உதவியால் பார்ப்போமாகில், அவற்றின் வெளியங்கத்தையும் மூலஸ்தானமான நடு - ஆணத் (Nucleus) தையும் பார்க்கலாம். இந்த மூலஸ்தானத்தில்தான் அதன் உயிர் இருப்பதாகச் சொல்லலாம். ஏனென்றால்

அணுவை மனித வாழ்வுக்காக உழைக்கச் செய்கிற சக்தி, இந்த மூலஸ்தானத்திலேதான் இருக்கிறது. உடலில் அணுக்கள் பெருகி வளரும்பொழுது, மூலஸ் தானம் இரண்டாகப் பிரிவுபடும். பின்பு வெளியங்கம் பிரிந்துவிடும்; அதற்குப் பின் முந்திய ஜீவாணு இரண்டு ஜீவாணுக்கள் ஆகிவிடும்.

சற்று முதிர்ந்த கோழி முட்டையை, குஞ்சு வெளி வருவதற்கு முன் உடைத்து, அதன் இருதயத்தி லிருந்தாவது, வேறு அங்கத்திலிருந்தாவது, துளியளவு தசையை எடுத்து, விசேஷமான முறையில் செய்த ஒருவகைக் கண்ணாடிக் கருவியில் வைத்து, அசுத்த மாகாதபடி காப்பாற்றித் தகுந்த உணவு நீரைக் கொடுக்கலாம். இப்படிச் செய்தால் அந்த அம்சத்தி லிருக்கும் ஜீவாணுக்கள் வளருவதைப் பார்க்கலாம். வெகு நாட்கள் மட்டும் இவை வளர்ந்து பெருகிக் கொண்டே இருக்கும்.

இதையெல்லாம் பார்க்கும்போது, மனுஷ ஜீவன் ஏக வஸ்துவா? பல உயிரணுக்களின் தொகுதியா? என்னும் சந்தேகம் தோன்றும்.

உயிரும் உயிரும் ஒன்று சேருமா? சேர்ந்தால் ஒரே உயிராக இருக்குமா? பிரதம ஜீவராசிகளின் (Protozoa) வாழ்வில் உயிரும் உயிரும் ஒன்று சேர்ந்து ஒரே உயி ராகக் கொஞ்ச காலம் இருப்பதைக் காணலாம்.

பின்பு இது பிரிந்து, முன்போலவே இரண்டாகும். உயர்தர வகுப்புப் பிராணிகளில் இரண்டு உயிரணுக்கள் சேர்ந்து, ஓர் உயிரணுவாவது கர்ப்பாதான காலத்தில் நிகழும் சம்பவத்தின் அதிசயம். இங்கே ஆண் ஜீவ அணு, பெண் ஜீவ அணுவுக்குள் புகுந்ததும் அவ்விரண்டின் நடுவாணங்களும் ஒன்றாகச் சேர்ந்துவிடும்; அவை அப் பொழுது ஒரே ஜீவாணுவாகப் பரிணமிக்கின்றன. ஆனால் இந்த ஜீவாணு ஒன்றாக இருப்பதில்லை. வெகு

விரைவில் பல அணுக்களாகப் பெருகிச் சேர்ந்து, ஒரு பிராணியாக உருக்கொள்கிறது. ஆகிருதியைத் தவிர மற்ற எல்லா விதத்திலும் தாய் தந்தையரைப்போன்ற பிராணியாகித் தாயின் கர்ப்பாசயத்திலிருந்து வெளி வருகிறது.

உலகில் எவ்விடத்திலும் இப்படிப்பட்ட உயிர்ப் பிரபாவங்களைப் பார்க்கும்போது, மனுஷ ஜீவன் ஒன்று தான் என்று எப்படிச் சொல்ல முடியும்? உடல் இறந்து, பஞ்ச பூதங்களாகப் பிரிந்து போனாலும், ஆத்மா தனி யாக இருக்கும்; உடனேயே பரலோகத்திற்குப் போகும்; அல்லது மண்ணுக்கடியில் உடலுடன் தங்கியிருந்து விட்டுக் கடவுள் அழைக்கும்பொழுது எழுந்து, அவர் முன்னே போய் நிற்கும்' என்றெல்லாம் எப்படிச் சொல் வது?

கடவுள் சர்வ வியாபியாக இருப்பதுபோல், உயிரும் ஒவ்வொரு ஜீவராசியிலும், அதை ஆக்கி அமைக்கும் ஒவ்வோர் அணுவிலும் பரவியிருப்பதாக ஏன் சொல்லக் கூடாது? ஒவ்வோர் உயிரும் தன்னைப்போல் எண்ணற்ற உயிர்களாகப் பிரியக் கூடிய சக்தியைக் கொண்டது. உடலை விட்டு உயிர் பிரிந்துவிட்டால், எந்த இயற்கைச் சக்திகள் சேர்ந்து அதை ஒன்றாகச் சேர்த்தனவோ அந்தச் சக்திகளால் பல உயிர்களாகப் பிரியுமென்று ஏன் சொல்லக்கூடாது?

உணர்ச்சியும் ஞாபகமும் பல தருணங்களில் இல் லாமற் போகும். நாம் தூங்கும்போது நமது உணர்ச்சி யும் ஞாபகமும் மறைந்து போகின்றன. பின்பு, எப் படியோ திரும்பி வருகின்றன. குளோரோபாரம் முதலிய மருந்துகளினால் உணர்ச்சியும் ஞாபகமும் மறைகின்றன. சில நோய்களினால் ஞாபகமும் உணர்ச்சியும் போய்விடு கின்றன. இந்த நிலையிலெல்லாம் உயிர் இருக்கின்றது என்றே சொல்லுவார்கள். இதையெல்லாம் யோசிக்கும் அளவிலே, ஆத்மா எங்கே இருக்கிறது?

# 2

# பூர்வ ஜன்மம்

**நா**ம் அநுபவிக்கும் கஷ்டங்கள் அனைத்தும் பூர்வ ஜன்மத்தில் செய்த கர்ம பலன் என்பார்கள். குணப்படுத்த முடியாத நோயினால் ஒருவன் வருந்தினால், அவன் முன் ஜன்மத்தில் செய்த கர்ம பலனே இந்த வியாதிக்குக் காரணம் என்றும் கூறுவார்கள். பிரசவத்திலே வேதனை ஏற்படுகிறது. காயம் படுகிறபோது உடலெங்கும் நோகிறது. பல விதமான வியாதிகள் உடலை நோகச் செய்கின்றன. இப்படி வியாதி, காயங்கள், பிரசவம் இவைகளினால் துன்பப்படும்போது, 'கர்மம், எல்லாம் கர்மம்! பொறுத்துக்கொள்ளத்தான் வேண்டும்' என்பார்கள்.

கர்மம் என்றால் என்ன? ஒருவனை அடிக்கிறோம். அடிபட்டவனுக்கு நம்மைவிட அதிகப் பலம் இருந்தால் அவன் நம்மைத் திரும்ப அடிக்கிறான். ஒரு வேளை நாம் கொடுத்ததைவிட அதிகமாகவே நமக்குக் கிடைக்கலாம். இப்படி நாம், 'சுண்டைக்காயைக் கொடுத்துப் பூசணிக்காயை வாங்குவதுபோல்' கர்மத்தைவிடக் கர்ம பலனை அதிகமாகவே அடையலாம். இந்தக் கர்ம பலனை உடனேயே அநுபவிக்கிறோம். கையிலே சுடச் சுடக் கர்ம பலன் கிடைத்துவிடுகிறது.

காக்காய் வலியைக் கர்ம வியாதி என்று சொல்லுகிறோம். ஒரு வகையிலே அது கர்ம வியாதிதான். ஏனெனில், அது ஒரு பரம்பரையிலே தோன்றிப் பின் சந்ததியில் யாருக்காவது வருவதும் வழக்கம்.

ஹேமோஃபிலியா என்று ஒரு வியாதி உண்டு. இந்த நோயினால் வருந்துபவனுக்கு ரத்தக் காயம் பட்

டால், ரத்தம் கட்டுப்படாமல் வெளியே பெருகிக் கொண்டே இருக்கும். இது மரணத்துக்கு ஏது ஆக லாம். இந்த வியாதியும் வம்ச பரம்பரையிலே தோன்றும் இயல்புடையது. பெண்கள் வழியிலே இறங்கி, வம்ச பரம்பரையில் தோன்றுவது இதன் குணம். ஆனால், பெண்களுக்கு இந்த நோய் வராது; ஆண் குழந்தை களிடத்திலேயே தோன்றும். இதையும் கர்ம வியாதி என்றே கருத வேண்டும்.

இதுபோலவே சில குடும்பங்களில் காசநோய் அல்லது இழுப்பு நோய் பாரம்பரியமாக வருவதுண்டு. இதற்குப் பல காரணங்கள் உள. அவற்றுள் ஒன்று, அந்த வம்சத்தில் பாரம்பரியமாகக் காணப்படும் பலக் குறைவான உடல் அமைப்பு. இப்படியே நீரிழிவும் வம்ச பாரம்பரியமாகத் தோன்றும் வியாதி என்றும், ஒரு வம்சத்தினருடைய உடல் அமைப்பே இதற்குக் காரணம் என்றும் கூறுவார்கள்.

உயரம், பருமன், மெலிவு, கண் பார்வையின் தீக்ஷண்யம், அற்பாயுசு, தீர்க்காயுசு, மாலைக்கண் முதலி யனவும் வம்ச பாரம்பரியமாக ஏற்படும் இயல்புகள் என்பார்கள்.

பூர்வ ஜன்மம் என்றால் என்ன? இதைத் தெரிந்து கொள்வது வெகு கஷ்டமான காரியம். பூர்வ ஜன்மம் உண்டா இல்லையா என்று தீர்மானம் செய்வது எளி தன்று. ஆத்மா ஒரு ஜன்மம் எடுத்து முடிந்ததும் இன்னொரு ஜன்மம் எடுப்பதாகச் சொல்லுகிறார்கள். இதைத் தெளிவுபடுத்துவது வெகு கடினமான விஷயம். இருந்தபோதிலும், புனர் ஜன்மம் என்பதை ஒரு வகையிலே அர்த்தம் செய்துகொள்ளலாம். நாம் தாயின் வயிற்றிலே ஜனிக்கும்போது, நமது உடலில் இரண்டு அம்சங்கள் உண்டு என்று விஞ்ஞானிகள் தெளிவாக ஆராய்ந்திருக்கிறார்கள். ஒன்று உடல் அம்சம், மற் றொன்று ஜனன அம்சம். ஜனன அம்சம் பாரம்பரிய

மாக வரக்கூடியது. உடல் அம்சம் உடல் வளர்ச்சிக்கென்றே ஏற்பட்டது. இந்த அம்சம் சரீரத்தினின்று உயிர் நீங்கும்போது முடிவடைந்துவிடுகிறது. ஸ்திரீயின் ஜனனும்சமும் புருஷனுடைய ஜனனும்சமும் சேர்ந்து மறுபடியும் ஒரு ஜீவனுகிறது. ஆண் ஜனனும்சம் ஒன்றில் அந்த ஆணின் குண விசேஷமும், ஒரு பெண்ணின் ஜனனும்சத்தில் அந்தப் பெண்ணின் குண விசேஷமும் அடங்கியிருக்கும். இந்த ஜனனும்சங்களிலுள்ள ஒவ்வொரு ஜீவாணுவிலும் குரோமோசோம் (Chromosome) என்னும் சில பிரகிருதிப் பொருள்கள் உண்டு. இவைகளுடைய எண்ணிக்கை ஒவ்வோர் உயிர் இனத்திலும் எத்தனை எத்தனை இருக்கும் என்றும் பிராணி சாஸ்திரிகள் ஆராய்ந்திருக்கிறார்கள். ஒரு பிராணியின் குண விசேஷம் அதன் குரோமோசோம்களில் அடங்கியிருக்கிறது. நிறம், உயரம், உடல், இயல்பான வளர்ச்சிப் போக்கு முதலான வம்ச பாரம்பரிய லக்ஷணங்கள் யாவும் குரோமோசோம்களில் அடங்கியிருக்கின்றன. உடல் அம்சத்தைச் சேர்ந்த ஜீவாணுக்களில் குரோமோசோம்கள் இரட்டையாக இருக்கும். ஜனன அணுக்களில் மட்டும் ஒற்றையாகவே இருக்கும். குரோமோசோம்கள் இருக்கும் இடமே ஜீவாணுவின் நடுவாணம்.

மனுஷ ஜீவாணுவில் 48 குரோமோசோம்கள் உண்டு. ஆகவே, ஜனன அணுவில் 24 குரோமோசோம்களே இருக்கும். ஸ்திரீ புருஷ சங்கம காலத்தில் புருஷ ஜீவ அணு, ஸ்திரீ ஜீவ அணுவில் ஐக்கியமாகும்பொழுது இரண்டிலும் இருக்கும் குரோமோசோம்கள் கலந்து இரட்டையாகச் சேர்ந்துவிடும். இந்தக் குரோமோசோம்களின் வழியாக ஸ்திரீயினுடைய வம்ச குணங்களும் புருஷனுடைய வம்ச குணங்களும் சந்ததிகளிலே வந்து கலந்துவிடும். சிசு வளரும்பொழுது இரண்டு வம்ச குணங்களும் வெளியாகும். குறைவுகள், தோஷங்கள், புத்திக்கோளாறுகள், புத்தி விசேஷங்கள் எல்லாம்

ஒவ்வொன்றாக வெளிப்படும். வளரும் சிசுவைக் கவனித்தால் இவை அனைத்தும் தெளிவாகப் புலப்படும்.

சில குணங்கள், முதல் தலைமுறையில் காணப்படும். வேறு சில, இரண்டாவது தலைமுறையில் வெளிப்படும். பின்பு வம்ச குணங்கள் அநேகம் பிரிந்து பிரிந்து வெளிப்படுவதும், முற்றும் வெளிப்படாமல் இருப்பதும் உண்டு. இந்த அதிசயங்களை யெல்லாம், சிறிய பிராணிகளையும் பூச்செடிகளையும் ஆராய்ந்து கண்டு பிடித்துப் பல விஞ்ஞானிகள் வெகு விரிவாக எழுதியிருக்கிறார்கள்.

இதையெல்லாம் கவனிக்கும்பொழுது, நம் முன்னோர்களுடைய ஜனனாம்சங்கள் திரும்பத் திரும்பப் பங்கு பங்காகப் பிரிந்தும் சேர்ந்தும் சந்ததிகளிலே வருவதைத்தான் பூர்வ ஜன்மம் என்று சொல்ல வேண்டும். இப்படிப் பாரம்பரியமாகக் கலந்துகொண்டே வந்து, பலவிதக் குணங்களையும் மாறுபாடுகளையும் வெளிப்படுத்திக்கொண் டிருப்பதுதான் பூர்வ ஜன்ம வாசனை.

தாய் தந்தையரிடமிருந்து சந்ததிக்கு வரக் கூடிய நோயை பூர்வ ஜன்மத்தில் செய்த கர்மத்தால் ஏற்பட்ட வியாதி என்று சிலர் சொல்லக் கூடும். ஒருவகையான மேக வியாதியை இவ்விதமான கர்மவியாதி எனத் தகும். சிசு, தாயின் கர்ப்பாசயத்தில் வளரும்போது, தாயிடமிருந்து இந்த வியாதியைச் சம்பாதித்துக்கொள்ளும். சிசுவாக வளரும் ஜனன அணுக்களில் இந்த வியாதியின் கோளாறுகள் காணப்படா. பெற்றோருடைய அதிக்கிரமமான செயல்களினாலே சிசுவுக்கு வரும் வியாதியே இது. இதைக் கர்ம வியாதி என்று சொல்லும்போது, பூர்வ ஜன்ம வியாதி என்று அர்த்தமாகாது.

பூர்வ ஜன்ம வாசனை, பூர்வ ஜன்ம பலன் என்பவைகளை யெல்லாம் நூதன விஞ்ஞானக் கொள்கைப்படி,

வியாக்கியானம் செய்வதை எல்லாரும் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். ஒப்புக்கொண்டால் என்ன, ஒப்புக் கொள்ளாவிட்டால் என்ன? பகுத்தறிவுக்குப் பிரத்தி யக்ஷமாக இதைவிட வேறு எப்படித்தான் விளக்கிக் காட்ட முடியும்? இதற்குமேல் அதிகமாகச் சொல்வதற் குப் போதுமான அளவிலே விஞ்ஞான ஆராய்ச்சி இன் னும் விருத்தியடையவில்லை.

பிரசவத்தாலும் ஆபரேஷனுலும் பலவித வியாதி களாலும் ஏற்படக்கூடியவேதனைகளை, உணர்ச்சி இந்திரி யங்கள் உணர முடியாமல் செய்கிற பல ஔஷதங்களை, இந்தக் காலத்தில் நவீன விஞ்ஞான ஆராய்ச்சியால் கண்டுபிடித்திருக்கிறார்கள். 'இது கர்ம வியாதி. எவரா லும் சொஸ்தப்படுத்த முடியாது' என்று முடிவு செய்த சில நோய்களையும் பல நூதன மருந்துகளால் குணப்படுத்திவிடலாம். குணமடைந்தவர்களைத் திரும் பவும் சமூக வாழ்க்கையில் சாதாரண மனிதர்களைப் போலவே மானமாக வேலை செய்து, வாழச் செய்து விடலாம். ஆராய்ச்சியினால் விஞ்ஞானம் மேலும் மேலும் வளரும்போது கர்ம வியாதி என்பதே இல்லை என்று சொல்லும்படி யாவற்றையும் வென்றுவிடலாம் அல்லவா?

ஏழையாக இருப்பவனைப் பார்த்தால் பணக்காரர் கள், 'ஐயோ பாவம், பூர்வ ஜன்ம பலன்! அதனாலே தான் இந்த ஜன்மத்தில் ஏழையாக இருக்கிறான்' என்று சொல்லிவிடக்கூடும். உடல் வலிமையினால் நன்றாய் வேலை செய்து சிக்கனமாகப் பிழைக்கும் ஏழை ஒருவன் பணம் சேர்த்துவிட்டால், அவனைப் பார்ப்பவர் கள், 'பூர்வ ஜன்மத்தில் என்ன புண்ணியம் செய்தானோ! இந்த ஜன்மத்தில் இப்படிப் பணம் சம்பாதித்து விட்டான்!' என்று சொல்லுவார்கள்.

இவ்வுலகத்தில் காணப்படும் கஷ்டங்களையும் ஈன மான நிலைமைகளையும் வறுமைகளையும் தீர்ப்பது தங்கள்

பொறுப்பு என்று கருதாமல், செல்வர்கள் தங்கள் இஷ்டப்படி வாழவேண்டுமானால், 'இது பூர்வ ஜன்ம கர்ம பலன். அது பூர்வஜன்ம கர்ம பலன்' என்றெல்லாம் சொல்லிவிடுவது மிகவும் சௌகரியமான சாக்குப் போக்கல்லவா? இது பணக்காரர்களுக்கு மட்டும் சாக்குப்போக்காக இருப்பதில்லை. கஷ்டப்படுகிறவர்கள், 'பூர்வ ஜன்மத்தில் என்ன கர்மத்தைப் பண்ணினேனோ?' என்று தங்களைச் சமாதானப்படுத்திக் கொள்வதற்கும் இது உதவுகிறது. தரித்திரர்களுக்குத் தங்கள் ஐசுவரியத்தைப் பங்கிட்டுக் கொடுத்து, வறுமையைத் தீர்க்க மனமில்லாத தனிகர்கள், 'ஐயோ பாவம்! பூர்வஜன்மத்திலே செய்த கர்ம பலன்!' என்று சொல்லித் தங்கள் மனச் சாட்சியைத் தேற்றிக்கொள்ளவும் வெகு சௌகரியமான ஒரு வேதாந்தம் இது!

# 3

# வேதனை

அடிபட்டாலும் வேதனையே; கிள்ளுப்பட்டாலும் வேதனையே; சூடு பட்டாலும் வேதனையே; சுருக்கென்று தைத்தாலும் வேதனையே; உடலுக்கு உபாதை வந்தாலும் வேதனையே; மனத்துக்குத் துயர் வந்தாலும் வேதனையே; இப்படியே ஓயாமல் பல வேதனைகள் மனிதனுக்கு ஏற்பட்டுக்கொண்டே இருக்கின்றன.

வேதனைகளை உணரும் உணர்ச்சி வேகம், மனிதனுடைய உடற்கூற்று அமைப்பைப் பொறுத்தது. தேக அமைப்போ பூர்வ ஜன்ம வாசனைகளை ஆதாரமாகக் கொண்டது. கல்வி, அறிவு, பண்பு என்பன வேதனைகளை உணரும் உணர்ச்சி நரம்புகளை அடக்கி ஆளவும், வேதனையைச் சகிக்கவும் நம்மைப் பழக்கிவிடுகின்றன. அறிவாளி ஒருவன் மனத்தைப் பல வழிகளிலே செலுத்தி, கொடிய வேதனைகளைச் சகித்துக்கொள்ளப் பழகிவிடுகிறான்.

'உயிர்களுக்கு வேதனை எதற்காக ஏற்படவேண்டும்? பயம் எதற்காக ஏற்பட்டிருக்கிறது?' என்ற கேள்விக்கு அளிக்கும் பதில்தான், வேதனை எதற்காக என்ற கேள்விக்கும் பதில். அபாயம் நேரிட்டால் நம்மைத் தற்காத்துக்கொள்வதற்குப் பயம் அவசியம். 'அபாயம் வந்துவிட்டது! தப்பிப் பிழைக்க வழி தேடு!' என்று நம்மைத் துரிதப்படுத்துகிறது வேதனை.

வேதனையை ஓரளவுதான் தாங்க முடியும். அளவு கடந்த வேதனையைத் தாங்க முடியாமல் நாம் பிரக்ஞையற்றுப் போகலாம். குழந்தை, விளக்கின் பிரகாசத்தைக் கண்டு அதைப் பிடிக்கக் கையை நீட்டுகிறது.

விரலில் உஷ்ணம் தட்டின உடனே கையைச் சட்டென்று பின்னுக்கு இழுத்துக்கொள்ளுகிறது. ஃகை கொப்பளியாமலே குழந்தையை அபாயத்திலிருந்து காப்பாற்றுவது வேதனை தான்.

சில தருணங்களில் நமக்கு ஏற்படக் கூடிய அபாயம் சிறிதாக இருந்தாலும் அதை அறிவிக்கும் வேதனை பெரிதாக இருக்கலாம். சில தருணங்களில் பொறுக்க முடியாமலே போய்விடலாம். அப்பொழுது வேதனையினால் உடலுக்கு அபாயம் வரலாம். இப்படிப்பட்ட தருணங்களில் அபின் அல்லது அதைப்போன்ற மயக்க மருந்துகளைப் பிரயோகம் செய்து, வேதனையைத் தவிர்ப்பது அவசியமாகும்.

மிருகங்களைவிட வேதனையை அதிகமாகச் சகிக்கும் ஆற்றல் மனிதனுக்கு உண்டு. எந்த அளவிலே மிருகங்கள் வேதனையைச் சகிக்க முடிகிறதோ அந்த அளவிலே தான் அறிவில்லாத ஜனங்களாலும் குழந்தைகளாலும் வேதனையைச் சகிக்க முடிகிறது. இவர்கள் வேதனை ஏற்பட்டவுடனேயே கூச்சலிடத் தொடங்குவார்கள். வேதனைக்கு எது காரணமோ அதை எதிர்த்து ஒழித்து விடுவார்கள். அல்லது வேதனைக்குக் காரணமாகும் இடத்தைவிட்டுக் குதித்து ஓடுவார்கள். சாதாரணமாக மனிதனுடைய செய்கைகள், யோசனைக்குப் பின் நிகழ்பவை. ஆனால் மேல் குறித்த செயல்கள் முன் யோசனையின்றியே மனமறியாமலே பிரகிருதி சுபாவமாகவே நிகழும் செயல்கள்.

சிறு வயதில் நிகழும் சம்பவங்களைப்பற்றிய ஞாபகங்கள், மூளையிலிருந்து எளிதில் மறைவதில்லை என்பது யாவருக்கும் தெரியும். ஏதேனும் ஒரு காரணம் பற்றி ஒரு குழந்தைக்கு வேதனை ஏற்பட்டால் அந்தக் குழந்தை நெடு நாட்கள் வரைக்கும் அதை மறவாமல் ஞாபகத்தில் வைத்திருக்கும். தனக்கு வேதனை உண்டு பண்ணக் காரணமாக இருந்த பொருளின் உருவம்

கண்ணுக்கு முன் தென்படாமல் இருக்கும்போது அதனால் விளைந்த வேதனையே ஞாபகத்திற்கு வராது.

அப்படியே உருவங்களைக் கண்ணால் பார்த்துத் தெரிந்துகொள்ள முடியாமல் இருக்கும் பருவத்திலும் குழந்தைக்கு இந்த ஞாபகம் இராது. இந்த நிலையிலிருக்கும் சிசுவுக்கு எந்தக் காரணத்தினாலாவது வேதனை ஏற்பட்டால் அதைத் தாங்கமாட்டாமல் அது அழலாம். அந்த வேதனைக்கு இன்னதுதான் காரணம் என்றும் அதிலிருந்து தப்ப இன்னது செய்ய வேண்டுமென்றும் அதற்குத் தெரியாது.

ஆறு மாதக் குழந்தைக்கு அம்மை குத்தலாம். அப்பொழுது உண்டான வேதனை யாரால் நேர்ந்தது என்று குழந்தை அறிந்துகொள்ள முடியாது. ஆனால், ஒரு வயதானதும் ஏதேனும் வேதனை ஏற்பட்டால் அந்த வேதனை எப்படி ஏற்பட்டது என்று குழந்தையால் அறிந்துகொள்ள முடிகிறது. அறிந்ததை நெடுநாட்கள் வரைக்கும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுகிறது. அந்த ஞாபகத்தை நினைப்பூட்ட ஏதேனும் ஒன்று எதிர்ப்பட்டால், உடனே தான் முன்னே அநுபவித்த அதே வேதனை திரும்பவும் உண்டாகிவிடுமோ என்று குழந்தை பயப்படும்.

வேதனையை உணரும் தன்மை ஆளுக்கு ஆள் வித்தியாசமானது. உண்மையாகவே நிகழ்ந்த சில திருஷ்டாந்தங்களைக் காட்டி இதைத் தெளிவாக்கலாம்.

கிட்டுவுக்கு விளையாட்டென்றால் நிரம்ப ஆசை. எந்தக் குழந்தைக்குத்தான் விளையாட்டிலே ஆசை இல்லை? கிட்டுவுக்கு விளையாட்டு இருந்தால் போதும்; சாப்பாடுகூட வேண்டாம்! விளையாட்டில் இருந்த பற்றை அவன் மறக்க வேண்டும் என்று தகப்பனார்

அவனைப் பிரம்பால் அடித்தார். அடிபட்ட மறு நாளி லும் அவன் விளையாட்டை விடவில்லை. தெரு வழியாகப் பள்ளிக்கூடத்துக்குப் போகும் பையன்களைத் தன் னோடு விளையாட இழுப்பான். கிட்டுவின் தகப்பனு ரிடம் மற்றப் பிள்ளைகளின் பெற்றோர்கள் புகார் சொன் னார்கள். மறுபடியும் பையனுக்குப் பிரம்படிகள் கிடைத்தன. பையன் கொஞ்சங்கூட அழவில்லை. உடல் அசையாமலே அடிகளைப் பட்டுக்கொண்டான். அடிபட்ட இடங்கள் சிவந்துவிட்டன; ரத்தம் கசிந்தது. பல்லைக் கடித்து அடிகளையெல்லாம் பொறுத்துக்கொண் டான். விளையாட்டில் இருந்த ஆசை, எதையும் சகிக்கச் செய்துவிட்டது. அடிக்கடி அடிகள் படுவதனாலும் காயங்கள் ஏற்படுவதனாலும் வேதனையைச் சகிக்கும் தன்மை ஏற்பட்டுவிட்டது. தன் உடம்பிலே காயம் பட்டால் அது வீட்டில் இருப்பவர்களுக்குத் தெரியக் கூடாதென்று மறைக்கவும், சகிக்கவும் பழகிவிட்டான் கிட்டு. இதனாலேதான் அவன் தன் தகப்பனாருடைய அடிகளை லக்ஷ்யம் பண்ணவில்லை.

மன உறுதி செய்துகொள்வதனாலும் வேதனையைச் சகிக்க முடியும் என்பதற்கு ஒரு திருஷ்டாந்தம்: வேதாந்த தேசிகர் எப்போதும் பகவத் தியானம் செய்ப வர். பின்வரும் சம்பவம் நடந்த காலத்தில் அவருக் குச் சுமார் நாற்பது வயது இருக்கலாம். எப்போதும் பகவானையே தியானம் பண்ணி, ஆத்ம ஞானம் பெற்ற பரம பாகவதர் அவர். ஒரு நாள் அவருடைய வீட்டுக் கூரையில் நெருப்புப் பற்றியது. உடனே கூரையி லிருந்த கழிகளையும் கொம்புகளையும் இழுத்து எறிந்து நெருப்பை அணைக்க முயன்றபோது, நெருப்பு விழுந்து கை வெந்துவிட்டது. நெருப்பை அணைக்குமட்டும் அவர் தம் கை வெந்ததை அறியவில்லை; அவருக்கு வேதனையும் தோன்றவில்லை. வேதனையால் வருந்துவ தாக அவருடைய முகமும் காட்டவில்லை. நெருப்பை

அணைத்ததும் சகிக்க முடியாத வேதனையை உணர்ந்தார். 'கிருஷ்ண, கிருஷ்ணு! கிருஷ்ண கிருஷ்ணு!' என்று மெதுவாகச் சொல்லிக்கொண்டிருந்தார். பின்பு தகுந்த சிகிச்சை நடந்தது.

தத்துவ ஞானிகளுக்கு வேதனையைச் சகிக்கவும் கஷ்ட நஷ்டங்களைத் தாங்கவும் மன வலிமை உண்டு. 'இது தீராத் துயரம்; இதைப் பொறுத்துத்தான் தீர வேண்டும்' என்று இவர்கள் தம் மனத்தை வேறு விஷயங்களில் செலுத்தி வேதனையை உணராமல் இருக்க வழி தேடுகிறார்கள். வேதாந்த தேசிகர் தமக்கு ஏற்பட்ட வேதனையை உணர நேரமில்லாமல் நெருப்பை அணைப்பதில் முழுக் கவனத்தையும் செலுத்தியிருந்தார். பாமர ஜனங்கள் கூட வயது முதிர்ச்சியால் ஏற்படும் அநுபவ ஞானத்தாலும் தொழில் ஊக்கத்தாலும் வேதனையைப் பொறுத்துக்கொள்வார்கள்.

கறுப்பனுக்கு வயது அறுபது இருக்கும். விறகு வெட்டிப் பிழைப்பவன். ஒரு நாள் காலில் ஒரு விறகுக் கட்டை விழுந்துவிட்டது. பலத்த காயம். வயிற்றுப் பிழைப்புக்காக வேலை செய்யவேண்டுமே என்ற கவலையால் காலில் பட்ட காயத்தைப் பொருட்படுத்தாமல் இருந்துவிட்டான். இரண்டு நாட்கள் வழக்கப்படி வேலை செய்தான். விஷ ஜுரம் கண்டது; 'இனிமேல் வேலை செய்ய முடியாது' என்று உணர்ந்தான். உடல் க்ஷீணம் அடைந்தபோதுதான் வைத்தியத்துக்கு வந்தான். டாக்டர் அவனுக்கு மயக்கம் கொடுக்காமலே ஆபரேஷன் செய்தார். அவன் முகத்தைச் சற்றும் சுளிக்காமல் ஆபரேஷனால் ஏற்பட்ட வேதனையை யெல்லாம் சகித்துக்கொண்டான். இதற்குப் பின் நடந்த வைத்தியத்திலும், 'வலிக்கிறது' என்று அவன் ஒரு தடவை கூடச் சொல்லவில்லை.

சுப்பிரமணிய செட்டியார் செய்துவந்த தொழில், வியாபாரம். அவருக்கு வயது ஐம்பது. நீரிழிவு வியாதி

உண்டு. அவருடைய காலில் ஒரு ராஜபிளவை புறப்பட்டது. இரண்டு நாட்களாக வேதனை இருந்த போதிலும் நோவு இருப்பதாகச் சொல்லவில்லை. ரத்தத்தில் தோஷ வாயுக்கள் பரவியபடியால் பிரக்ஞையற்றுப் போய் வேதனையை உணர முடியாமல் இருந்தார்.

குடி வெறியில் இருப்பவனும் வேதனையை அறிய மாட்டான். மயக்கத்தை உண்டுபண்ணும் கள் முதலியவற்றை உட்கொண்டால் பிரக்ஞைக் குறைவு ஏற்படும். வேதனையை உணரும் சக்தியும் குறையும். பக்தி வைராக்கியத்தினாலும் மத ஆவேசங்களினாலும் அளவு கடந்த மனக் கிளர்ச்சி எழும்பொழுது வேதனை உணர்ச்சி குறைகிறது. கடவுளைத் தியானித்துப் பக்திபரவசம் மேலிட்டிருப்பவர்கள் நெருப்பிலே நடக்கிறதைப் பார்த்திருக்கிறோம். நெருப்பின் உஷ்ணத்தை இவர்கள் உணர்வதில்லை. நெருப்பில் நடக்கும்பொழுது இவர்களுடைய மனத்தை வேறு முகமாகத் திருப்புவதற்காக வாத்தியங்களை முழக்குவார்கள்; ஆர்ப்பரித்து ஆவேசம் உண்டுபண்ணுவார்கள். ஸ்திரீகளுக்குச் சாதாரணமாக வேதனையைச் சகிக்கும் சக்தி குறைவு. கொஞ்சம் வேதனை ஏற்பட்டாலும் சாகசம் செய்வதே இவர்கள் இயற்கைக் குணம் என்பது யாவருக்கும் தெரிந்த விஷயமே. மிதமிஞ்சிய துயரத்தையும் துக்கத்தையும் பொறுக்க முயலும்பொழுது, இவர்கள் மனம் மயக்க நிலை அடையும்; வேதனையை உணராதபடி செய்து கொள்வார்கள். இந்த நிலையை ஆங்கிலத்தில் ஹிஸ்டீரியா (Hysteria) என்பார்கள். இது ஒருவகை மன வியாதி எனப்படும். இத்தகைய வியாதிக்கு அடிக்கடி ஆளாகிறவள் விசாலாக்ஷி. ஒரு நாள் இவள் தனியாகக் காரை ஓட்டிக்கொண்டு போனபோது ஒரு மாட்டுவண்டி காரின் அருகில் வந்தது. வண்டி காரில் மோதிவிடுமோ என்று பயந்து காரை ஒரு பக்கமாகத் திருப்பினாள். அது ஒரு பள்ளத்தில் இறங்கிவிட்டது. வண்டிக்கார

னும் மற்றவர்களும் காரைத் தூக்கி ரோட்டுக்குக் கொண்டுவந்தார்கள்.

இவ்விதச் சம்பவங்கள் நடக்கும்போது பெரிய கும்பல் கூடுவது வழக்கந்தானே? அப்படியே ஒரு கூட்டம் கூடிவிட்டது. பட்ட காயங்களை எப்படியோ கட்டிக்கொண்டு சீக்கிரமாக வீடு வந்து சேர்ந்தாள். வேதனையைச் சகித்துக்கொண்டு வீட்டுக்கு வருமட்டும் சமாளித்தவள், வந்தவுடனே மயக்கமாக விழுந்து விட்டாள். டாக்டர் வந்தார். நாடியைப் பரிசோதித் தார். நாடி ஓட்டத்தில் பிசகு ஒன்றும் இல்லை. பட்ட காயங்களை அவிழ்த்துப் பார்த்தார். பலமான காயம் பட்டிருந்தது. கட்டியிருந்த கைக்குட்டையை அவிழ்த் ததும் ரத்தம் பீரிட்டு வந்தது. உடனே சிகிச்சை செய்தார் டாக்டர். மயக்கமும் தெளிந்தது. மானம் போய்விடுமே என்ற பயத்தினல் வேதனையைச் சகித்துக் கொண்டிருந்த விசாலாக்ஷி ஜனங்கள் மத்தியிலிருந்து வீட்டிற்குத் திரும்பி வருமட்டும் தன் மன வலிமையால் வேதனையைப் பொறுத்துக்கொண்டாள். மனவலிமை யால் வேதனையை அடக்கிக்கொள்ளும்பொழுது அதற்கு ஒரு பின்விளைவு உண்டு. அதனுலேதான் வீட்டுக்கு வந்ததும் மயக்கம் வந்தது. இந்த மயக்கம், பலத்த அடி பட்டதனுல் வந்த மூர்ச்சை யன்று. ரத்த நஷ்டம் ஏற்பட்டதனுல் வந்த மயக்கமும் அன்று. அவ்வளவு நேரம் வேதனையைச் சகித்ததனுல் மனம், மயக்க நிலையை அடைந்துவிட்டது. வேதனை குறையவே மனமும் தன் இயல்பான நிலைமைக்கு வந்தது.

இந்த மயக்க நிலை மனத்திற்கு மிகவும் சௌகரிய மானது. சனம் என்பவளுக்கு வயது இருபது. பிறந்த வீட்டிலே செல்லப்பெண். புருஷன் வீட்டுக்கு வந்ததும் பிறந்த வீட்டுச் செல்லம் இல்லாமற் போயிற்று. பல விதத் துன்பங்களைச் சகிக்க சேர்ந்தது. பழக்கம்

இல்லாமையால் சிறு துன்பங்களும் மலையளவாகத் தோன்றின; சகிக்க முடியாத துக்கம் வந்துவிடும். அதோடு மயக்க நிலையும் ஏற்படும். அந்த மயக்கம், ஒரு மணி நேரத்திற்கு அதிகமாகவே இருக்கும் மயக் கத்தில் இருக்கும் அந்த நேரத்தில் அவளை என்ன செய் தாலும் அவளுக்குத் தெரியாது; ஊசியினால் குத்தினாலும் உணர்ச்சி இராது. இதற்கு ஒரு திருஷ்டாந்தம்: ஆயிரம் கால்களை உடைய மரவட்டையைப் பார்த்திருக் கிறீர்களா? அதைத் தொட்டால் உடனே முறுக்குப் போல் சுருண்டுவிடும். அப்படிக் கிடக்கும்போது அதை எப்படி வேண்டுமானாலும் திருப்பலாம், நெடுநேரம் சுருண்டபடியே கிடக்கும். இதே விதமான நிலைமை தான் தனத்தைப் போன்றவர்களின் மன நிலையி லும் ஏற்படுகிறது. மனம் சுருண்டுவிடுகிறது; சுரணை யற்றுப் போகிறது; மயக்க மேலீட்டினாலே.

மனத்தைத் திடப்படுத்தி ஆள்வதால் வேதனையை உணராதபடி செய்துவிடலாம் என்று மேலே காட்டிய உதாரணங்கள் தெளிவாக்குகின்றன. இந்த விஷயத்தை ஒட்டிய உண்மை ஒன்றைக் குறிப்பிட வேண்டும். கஷ்டம் வரும்போது கடவுளை உள்ளத்திலே இருத்தி அதைச் சகித்துக்கொள்ளும் பலரை நாம் பார்க்கிறோம். இவர்கள், பக்தியினால் மனத்தை ஆவேச நிலைக்குக் கொண்டுவந்து விடுகிறார்கள். வேதனையின்றிச் சுகமாக இருக்கும் உடலுக்குத் தங்கள் மனக் கற்பனையினா லேயே வேதனையை உண்டுபண்ணிக் கொள்ளுகிற வர்களும் உண்டு.

ஹடயோகிகள் வேதனையை உண்டுபண்ணுகிற சாதனங்களைத் திரும்பத் திரும்பக் கையாண்டு உட லும் மனமும் வேதனையை உணராதிருக்கப் பழகு வார்கள். இப்படிப்பட்ட செய்கைகளை இந்தக் காலத் திலும் பார்க்கலாம். முருகனிடத்தில் அன்பு பாராட்டி, நோன்பு நோற்பவர்கள் வாயிலும் நாவிலும் வேலைக்

குத்திக்கொண் டிருப்பதைப் பார்க்கிறோம். ஆணிகள் அடித்த பலகைகளிலே இருப்பதும் நிற்பதும் படுப்பதும் நெருப்பின்மீது நடப்பதும் இன்னும் இவை போன்ற பல துன்பங்களுக்கு ஆளாவதும் சுயமாகவே வேதனையை வருவித்துக்கொள்ளும் உபாயங்களே. இத்தகைய வேதனைகளைச் சகிக்க இவர்களுக்கு எங்கிருந்து சக்தி பிறக்கிறது? 'கடவுளே கொடுக்கிறார்' என்று சொல்லுவார்கள். அந்தச் சமயத்தில், உடம்பிலிருந்து மனத்தை வேறாகப் பிரித்து, உடல் படும் வேதனையை உணராத நிலைக்கு இவர்கள் தம் மனத்தைக் கொண்டுவந்து விடுகிறார்கள்.

அடம் சாதித்தலும் கோபாவேசமும் பக்தி பரவசமும் மனத்தை ஆவேச நிலைக்குக் கொண்டுவந்து விடுகின்றன. ஆவேசம் ஏற்படும் தருணங்களில் மனம் உணர்வு அற்ற நிலையில் நிற்கிறது. உணர்ச்சிக் குறை ஏற்படுகிறது. அடம் சாதிக்கிறவன் எந்தக் காரியத்தை நிறைவேற்ற வேண்டுமென்று உத்தேசிக்கிறானோ அதில் சித்தி பெறுவதற்காக வேதனைகளைத் திருணமாகக் கருதுகிறான். பண நஷ்டமும் வறுமையும் பிணியும் அவனைத் தீண்டா.

'மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்துஞ்சார்' என்ற பாட்டைப் பாருங்கள். துன்பங்களைப் புன்னகை பூத்த முகத்தோடு சகிக்க மனத்தைப் பழக்கிவிடலாம். மனம் நம் செய்கைகளைமட்டும் அல்ல, நம்முடைய உணர்ச்சிகளையும் அடக்கி ஆளுகிறது என்பது தெளிவல்லவா?

4

# மனமும் வேதனையும்

உணர்ச்சிக்கு மனம் எப்படி அதிகாரியோ, அப்படியே வேதனைக்கும் மனமே அதிகாரி. எக்காரணத்தினலாவது மனத்தின் அதிகாரம் குறைந்துவிட்டால் உணர்ச்சி அதிகரிக்கலாம். அதிகாரம் என்று சொல்லும்போது, 'இன்ன இன்ன உணர்ச்சிக்கு இன்ன இன்ன பிரகாரந்தான் கவனம் செலுத்தவேண்டும்; அதற்குமேல் அவசியமில்லை' என்று நிர்ணயிக்கும் சக்தி மனத்துக்கு உண்டு என்று தெரிந்துகொள்ளுகிறோம்.

பல காரணங்களினால் இந்த ஆற்றல் குறைந்து போகலாம். பழகப் பழகத் துன்பங்களை அலக்ஷ்யம் செய்வோம். அவ்வாறே துன்பங்கள் நம்மை அளவு கடந்து பாதித்தால், பொறுக்க முடியாத நிலை வந்துவிடும். துன்ப உணர்ச்சி மனத்துக்கு அடங்காமல் அதிகரிக்கும்.

மைதிலி என்பவளின் அநுபவம் மேற்கூறியதை விளக்கும். மைதிலி, தாய் தந்தைக்கு ஒரே குழந்தை. அவர்களுக்கு ஏராளமான செல்வம் உண்டு. நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்தாள். விளையாட்டு, ஆடை, தின்பண்டம் என்பவைகளில் அவளுக்குக் குறைவு என்பதே இல்லை. அவளுக்கு விவாகம் ஆயிற்று. செல்வமும் செழிப்பும் பொங்கி வழியும் வாழ்வு! அப்படியிருந்தும் அவளுக்கும் துன்பங்கள் ஏற்பட்டன. புக்ககத்தில் வேலை செய்யத் தேவையில்லை என்பது மட்டும் அல்ல; வேலை செய்ய ஒருவரும் சம்மதிக்க மாட்டார்கள். சமூகக கட்டுப்பாட்டினால் விளையாட்டிற்கும் தேகப்பயிற்சிக்கும் வழி

யில்லை. தேகம் ஸ்தூலித்தது. ஸ்தூல தேகத்தினுல் உண்டாகும் நோய்களும் விரைவில் தோன்றின.

உடலில் குடிபுகுந்த நோய்களுக்குச் சிகிச்சை செய்ய வைத்தியர்கள் பலர் வந்து போகவே, மருந்துகள் அலமாரிகளிலும் பெட்டிகளிலும் புகுந்துவிட்டன. இன்ஜக்ஷனும் சர்வ சாதாரணமாயிற்று. பின்பு ராஜ பிளவைகள் வெளிப்படவே, ஆபரேஷனுக்கும், அதற்குப் பின் நடைபெற வேண்டிய சிகிச்சைகளுக்கும் மைதிலி ஆளானுள். எவ்வளவோ வேதனைகளைச் சகிக்க நேர்ந்தது.

சிகிச்சையின் ஆரம்பத்தில் வேதனையைச் சகித்தவள், வர வர வேதனையைச் சகிக்க முடியாத நிலைக்கு வந்துவிட்டாள். முதலில் ஆபரேஷனுக்குத் துணிந்தவள், இப்போது கத்தி என்ற பெயரைக் கேட்டாலே பயப்படலானுள். வியாதியின் ஆரம்பத்தில் டாக்டர் வரவை ஆவலோடு எதிர்பார்த்தவள், இப்போது டாக்டர் வரும் சமயம் நெருங்கும்போது நடுங்கலானுள். குணமாக வேண்டுமென்ற ஆவலுடன் எத்தனையோ இன்ஜக்ஷன்களைப் பொறுமையோடு ஏற்றுக்கொண்டவள், இப்போது, 'ஐயோ, என்றைக்குத்தான் இன்ஜக்ஷன்கள் தொலையுமோ!' என்று கூச்சலிடத் தொடங்கினுள். நோயினுல் உடலுக்கு ஓயாத வேதனை. எந்தச் சமயத்தில் உடலுக்கு வேதனை நேரிடுமோ என்ற பயம் மனத்தில் குடி புகுந்துவிட்டது. இவளுக்கு இனி வேதனையைச் சகிக்கும் மனநிலை எப்போதாவது ஏற்படுமா என்பதும் சந்தேகந்தான். இவளுக்கு வைத்தியம் செய்யும் வைத்தியர்களிடமும் நாம் மனமாரக் கருணை பாராட்ட வேண்டுமே தவிர வேறென்றும் செய்வதற்கில்லை.

வேதாந்திகள் மனத்தைக் குரங்குக்கு ஒப்பிடுவார்கள். மனம் குரங்கின் குணத்தை மட்டும் அல்ல, உலகிலிருக்கும் சகலப் பிராணிகளின் குணங்களையும் பெற்றி

ருக்கிறது. தொன்று தொட்டு இயற்கை உணர்ச்சிக ளாக இந்தக் குணங்களை நாம் அடைந்திருக்கிறோம். அதனாலேதான், உலகில் மனிதர்களிடையே பலவித மான குண வித்தியாசங்களையும், ஒரே மனிதனிடத்தி லும் பலவிதமான குணவிசேஷங்களையும் பார்க்கிறோம். ஆனால், இவற்றை ஒரே சமயத்தில் காண முடியாது. சூழ்நிலைக்கும் கால பேதங்களுக்கும் ஏற்றவாறு இந்தக் குணங்கள் பல தருணங்களில் வெளிப்படுவதைப் பார்க்க லாம்.

கடைக்காரன் தன் கடையில் சாமான்கள் வாங்க வரும் ஒவ்வொருவரிடமும், அவரவருக்குத் தகுந்தபடி சாமான்களை எப்படி எடுத்துக் காண்பிக்கிறானே, அப்படியே மனிதனும் தன்னை அணுகி வரும் மனிதர் களுக்கு ஏற்றவாறு அவரவருக்குத் தகுந்த முறையிலே தன் மனத் தன்மைகளை வெளியிடுவான். ஒருவனிடம் ஒரு தன்மையை வெளியிடும்போது, இதர மனோ பாவங்கள் மறைந்து நிற்கும். மனிதன் பல வகை யான மனத்தோற்றங்களோடு இருப்பதுதான் இயற் கைக் குணம். ஆனால், சமூக வாழ்க்கையின் கட்டுப்பாடு களால் பலவகைப்பட்ட மனத்தோற்றங்களை மறைத்து வைக்கிறான்; அவற்றைச் சமயத்துக்கு ஏற்றபடி கையாளுகிறான்.

கல்வி, அறிவு, ஞானம், எல்லாம் சமூக வாழ்வுக்கு அநுகூலமான மனத்தோற்றங்களை மட்டும் வெளிப் படுத்துவன. பிரதிகூலமான தோற்றங்களை மறைத்து வைக்க மனிதனைப் பழக்கிவிடுகின்றன. சிறு குழந்தை களுக்குக் கல்வி புகட்டுகிறோம். நீதி நெறி ஒழுக் கங்களைக் கற்றுக் கொடுக்கிறோம். ஆனால், அவர்கள் அவற்றை எப்படி ஏற்றுக்கொள்ளுகிறார்கள் என்று நாம் வரையறுத்துச் சொல்ல முடியுமா?

கற்றுக் கொடுப்பவர்களுடைய எண்ணத்துக்கு விபரீதமாகவே சில குழந்தைகள் கற்றுக்கொடுப்பவை

களை ஏற்றுக்கொள்ளுகிறார்களே! இப்படி ஒவ்வொரு குழந்தையும் ஒவ்வொரு விதமாக ஏற்றுக்கொள்ள என்ன காரணம் என்று கேட்கலாம். எத்தனையோ ஜன்மங்களின் பரிணமக் கிரமத்தின் முடிவிடமாக அமைவது மானிட ஜன்மம். அணு ஒன்று ஜீவனுகப் பிறந்து ஹைட்ராவை (Hydra)ப் போன்ற ஆதி சமூக (கூட்டு) அணு ஜீவப் பிறப்பிலிருந்து நீர் வாழும் உயிராகி, பறவையாகி, பிராணியாகி, மிருகமாகி, உடல் விகாரம் பெற்றுப் பெற்று, குரங்காகி, வாலில்லாக் குரங்காகி, முடிவிலே பரிணமக் கிரமத்தின் சம்பவமான ஜன்மம், மானிடப் பிறவி என்று நவீன விஞ்ஞானம் கூறுகிறது.

'புல்லாகிப் பூடாய்ப்
புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப்
பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்'

என்று சொல்லும் பிறவிகள்தோறும், செய்யும் பாவ புண்ணிய கருமங்களின் பலனுக ஆத்துமா மானிட ஜன்மம் அடைகிறது என்று நமது வேதாந்தம் கூறுகின்றது. இந்தக் கொள்கைப்படி பார்த்தாலும், இடையறுத பிறவிப் பெருஞ் சங்கிலியின் கடைசி வளையமாக அமைந்த மனித ஜன்மத்தில், முந்திய பிறப்புக்களின் பலவித குணும்சங்கள் அமைந்திருக்கும் அல்லவா? மூலாதார ஜீவாணுவிலிருந்து பரிணமக் கிரமத்தில் விகாசம் அடைந்து வந்த பிராணி நிலைதோறும் காணப்பட்ட குண விசேஷங்களின் தொகுதியாக அமைந்த பிறப்பே மானிட ஜன்மம். இதனுலேதான் எத்தனையோ விதமான குண விசேஷங்களோடு தோன்றுகிறுன் மனிதன்.

மனிதனிடத்திலே பலவிதமான குண விசேஷங்கள் அமைந்திருந்தபோதிலும், அவை யாவும் வெளிப்

படாமல், மனிதன் மேலும் முன்னேற்றமடைவதற்குத் தேவையான குணங்களையே வெளிப்படுத்துகிறான். மனித வாழ்க்கையின் முன்னேற்றத்திற்கு விபரீதமான குணங்கள் எல்லாம் மறைவாக இருந்துவிடுகின்றன. இப்படி மறைந்திருக்கிற குணங்கள், தாம் வெளிப்படுவதற்கேற்ற சூழ்நிலைகளும், இடம் பொருள் ஏவல்களும் வாய்க்கும்பொழுது வெளிப்படுகின்றன.

பிறந்த குழந்தைக்கு ஒரே உணர்ச்சி: பசி. தாய்ப் பால் உண்ணவேண்டும்; வளர்ந்த மனிதனுடைய குணங்களோடு, பிறந்த குழந்தையினுடைய இந்த உணர்ச்சியை ஒப்பிட்டுப் பார்க்கும்போது, பிராணி லோகத்தின் மிகவும் கீழான நிலையிலிருக்கும் ஒரு பிராணியின் உணர்ச்சியாகவே இது தோன்றுகிறது. ஆனால், மிகவும் கீழான இந்த உணர்ச்சியையே பிரதானமாகக்கொண்டு வளரும் குழந்தை, மனித சமூக வாழ்க்கையில் முன்னேறி விகாசம் அடையும்பொழுது அதனிடம் காணப்பட்ட மிருக குணங்கள் ஒவ்வொன்றாக மாறிச் சமூக ஒழுக்கத்திற்கும் மானிட முன்னேற்றத்திற்கும் ஏற்ற குணங்களாக வெளிப்படுகின்றன அல்லவா? தாயின் வயிற்றிலே, கருப்பையின் உள்ளே, அணுஜீவ வடிவிலே புகுந்த சிசு ஸ்தூலீகரித்துப் பின்பு மீன் போன்ற உருவாகி, மிருகங்களுடைய உறுப்பு அமைப்புக்களைப் பெற்று, வளர்ந்து வருவதைக் காணலாம். தாயின் வயிற்றிலே, சினைப் பைக்குள்ளே இருக்கும், கண்ணுக்குப் புலப்படாத சிறு முட்டை அம்ச அணு, புருஷ பீஜ அணுவோடு கலந்து, கர்ப்பாசயத்திற்குள் உருவாகும் பொழுது அதில் என்ன என்ன சக்திகள், என்ன என்ன குணங்கள் அமைந்திருக்கின்றன என்று யாரால் சொல்ல முடியும்? இது மகா ஆச்சரிய மல்லவா?

'பேசி வந்த விஷயம் வேதனை. திடீரென்று சிசு ஜனன சாஸ்திரத்தில் புகக் காரணம் என்ன?' என்று சிலர் கேட்கலாம். வேதனை நம்மை அபாயத்திலிருந்து

காப்பதற்காக ஏற்படும் உணர்ச்சி என்று முன்னமேயே சொல்லிவிட்டோம். வேதனை அளவுக்கு மிஞ்சிவிடுமென்றும், வேதனையை மனவலிமையினால் அடக்க முடியுமென்றும், அடக்கும் சக்தி குறைந்துவிட்டால் வேதனையைச் சற்றும் சகிக்க முடியாது என்றும் அறிந்து கொண்டோம். இவைகளுக்குப் பல உதாரணங்களும் பார்த்தோம்.

'மனத்திற்கும் வேதனைக்கும் உள்ள உறவு என்ன?' என்ற விஷயத்தைத் தெளிவாக உணர்ந்துகொள்ளும் பொருட்டே சிசு ஜனன சாஸ்திரத்தை ஓரளவு சுட்டிக் காட்ட நேர்ந்தது. உடலிலும் பல உறுப்புக்களிலும் உணர்ச்சி நரம்புகள் வழியாகச் செல்லுகிற வேதனைகளைத் தவிர, சிந்தனைகளின் மூலஸ்தானமாகிய மூளைச் சோற்றிலும் வேதனை ஏற்படலாம். இது எப்படி என்று கவனிப்போம்.

அபாயத்தைக் கண்டாலும், அபாயம் ஏற்படும் என்று நிச்சயமாகத் தெரிந்தாலும், அதிலிருந்து தப்பி ஓட வழி தேடுவது எந்தப் பிராணிக்கும் இயற்கைக் குணம் அல்லவா? போர்க்களத்தில் வீர சுவர்க்கம் தேடும் குணம் மனிதனுக்குக் கல்விப் பண்பினால் உண்டானது. இந்த இரண்டு குணங்களும், யுத்த களத்தில் போர் செய்யத் தயாராக இருப்பவனுடைய மனத்தில் ஒன்றையொன்று வெளி வராமல் தடுத்துவிடும். போர் செய்யத் துணியும் குணத்தை அடக்குவதற்காக உயிரைக் காப்பாற்றிக்கொள்ளும் குணம் சில சமயம் வெளிப்படாமல் தடைப்படும். அப்போது மானத்தைக் காப்பதற்காக, மூளையின் ஆழத்திலிருந்து ஓர் உணர்ச்சி எழும்பி, ஏதாவதோர் அங்கத்தில் வேதனையை உண்டு பண்ணும். அதுவும் அவனை அறியாமலே நிகழும். அப்படிப்பட்ட போர் வீரன், பொய்யான வேதனையை உண்டுபண்ணிக்கொண்டு நம்மை ஏமாற்றப் பார்க்கிறான் என்று சொல்வது நியாயமன்று. அவனுடைய வேதனை

உண்மைதான். 'இந்த வேதனை தீரப் பரிகாரம் செய்து விடுங்கள். அப்போது போர் செய்யச் சன்னத்தனு யிருப்பேன்' என்று அவன் சொன்னால், அதை உண்மை என்று நாம் நம்ப வேண்டியதுதான்.

ஒரு சிறுவனுக்கு நேர்ந்தது இதிலும் சிறந்த உதாரணமாகும். ஸ்ரீநிவாசனுக்கு வயசு 14. பெற்றோர் களுக்கு அவன் தலைச்சன் பிள்ளையாக இருந்தபோது அவனுடைய பாட்டி அவனை அருமையாக வளர்த்தாள். ஸ்ரீநிவாசன் பிறந்ததும் பாட்டியின் அன்பு, பேரனிடம் வேகமாகப் பெருக்கெடுத்தது. சீனுவின் பத்தாவது வயசில் பாட்டியின் காலம் முடிந்தது. சீனுவிடம் அன்பு பாராட்ட யாரும் இல்லை. தாய், மற்றக் குழந்தைகளையும் வீட்டு வேலைகளையும் கவனிப்பதிலேயே கண்ணும் கருத்துமாக இருந்தாள். பாட்டியின் சிபாரிசு இல்லாத தனால், தகப்பனருடைய சிட்சைகளும் கட்டுப்பாடுகளும் சீனுவின் விஷயத்தில் அதிகரித்துவிட்டன.

சீனுவுக்குச் சிட்சையிலிருந்து தப்பித்துக்கொள்ள வேண்டும்; பாட்டியின் அன்பு, ஆதரவுக்குப் பதிலாக வேறு யாரிடத்திலாவது அன்பும் ஆதரவும் தேட வேண்டும் என்ற ஆவல் உண்டாயிற்று. இவையெல்லாம் அவன் மனத்தில் குழம்பிக்கொண்டிருந்தன. ஒருநாள், ஒருவன் கைவிரல்களை மட்டும் ஆட்டி, வாயைக் கோண லாக வைத்துக்கொண்டு தெருவில் உட்கார்ந்திருப்ப தைச் சீனு பார்த்தான். அவன் மனத்தில் இந்தக் காட்சி ஊன்றிப் பதிந்தது.

'என் உடம்புக்கு ஏதாவது நோய் வந்தால் தாய் என்னிடம் அன்பும் ஆதரவுமாக இருப்பாளே!' என்று எண்ணினன். இந்த எண்ணமும், விரலாட்டிக் கொண்டிருந்தவனைப்பற்றிய சிந்தனையும் மனத்தில் ஒன்றாகக் கலந்து வேலை செய்தன. உடனே, அவன் இடது கைவிரல் ஆடத் தொடங்கியது. விரல்களிலும் கையிலும் வேதனை உண்டாயிற்று. பொறுக்க முடியா

மல் சீனு வருந்தினன். யாரேனும் அருகில் வந்தால், 'கையைத் தொட்டுவிடுவார்களோ?' என்ற பயமும் உண்டாயிற்று. கையைத் தூக்கித் தலையணையின்மேல் தாங்கலாக வைக்கச் சொன்னன். வீட்டில் எல்லோ ரும் அவனை அதிகமாகக் கவனிக்கத் தொடங்கி ஞர்கள். அவன் மனம் சமாதானம் அடைந்தது. டாக்டர்களும் நாட்டு வைத்தியர்களும் வீட்டிற்கு வந்து சீனுவைச் சோதித்துப் பார்த்தார்கள். இன்ன நோய் சீனுவைப் பாதித்ததென்று அவர்களால் சொல்ல முடியவில்லை. பெரிய ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போனல்தான் சீனுவுக்குக் குணமாகும் என்று டாக்டர்கள் கூறினர்கள்.

வேதனையிலிருந்து அவன் மனத்தை மாற்றி வேறு விஷயங்களில் செலுத்த முயன்றபோது, அவனு டைய வேதனை குறைவதைக் கண்ட ஒரு டாக்டர் அவன் மனத்தைப் பல விஷயங்களில் திருப்பி, வேதனையை மறக்கச் செய்யும் வழிகளைக் கை யாண்டார். பின்பு வேதனை முற்றும் அகன்றது. சீனு வுக்கும் சந்தோஷம் உண்டாயிற்று. முன்போலவே சுகதேகி ஆனன். தாங்க முடியாத பல துன்பங் களும் கவலைகளும் மனத்தில் தோன்றினல், உடம்பில் எங்கேயாவது புதிய நோய் ஏற்படுவதையோ, ஏற்கனவே இருக்கும் வேதனை அதிகரிப்பதையோ பார்க்கலாம். கவலைக்கும் துன்பத்துக்கும் காரணமான ஏதுக்கள் நீங்கிவிட்டால், வேதனை மாறிவிடும்; அல்லது குறைந்துவிடும்.

ஒரு ஸ்திரீ. அவளுக்கு வயது சுமார் 45. பண விஷயமாகக் கோர்ட்டில் ஒரு தாவா நடத்திவந்தாள். பணம் கிடைக்காமல் போய்விடுமோ என்ற கவலை அதிகரித்தது. ஏற்கனவே ஏற்பட்ட நோயினல் வருந்திக்கொண் டிருந்த வேதனை இந்தக் கவலை வரவே அதிகரித்துவிட்டது. கேஸ் தீர்ப்புக்கு வர

நாலு வருஷங்கள் சென்றன. அவளுடைய வேதனையைப் போக்கப் பல வைத்தியங்களை அந்த நாலு வருஷமும் விடாமல் முயன்று வந்தனர். வைத்தியர்களுடைய வருமானமும் வளர்ந்தது. ஆனால், கேஸ் அவளுக்கு அநுகூலமாகத் தீர்ப்பான உடனே உடம்பு வேதனை, தானாகவே மாறிவிட்டது.

அன்பும் ஆதரவும் பெற்றுக்கொள்வதற்காக, வேதனையை வரவழைத்துக்கொண்ட சீனுவைப் போலவும், வந்த ஒரு வேதனையைப் பயன்படுத்திக் கொண்டு தம்மைச் சார்ந்தவர்களை அடிமைகளாக்கித் தம் ஆதீனத்துக்குக் கொண்டுவந்த அந்த ஸ்திரீயைப் போலவும் பல பேர்வழிகள் இருக்கிறார்கள். முத்தையாவின் சரித்திரம் இதைத் தெளிவாக்கும்.

முத்தையா நெடுநாள் நோயாளி. வேலை செய்வதென்றால் அவனுக்குக் கஷ்டந்தான். என்றாலும், தன்னைப்போல் வேலையில் கண்ணும் கருத்துமாக ஊக்கத்தோடு வேலை செய்கிறவன் மற்ற எவனும் இல்லை என்ற எண்ணம் அவனுக்கு எப்போதும் உண்டு. இப்போது, நோய் வந்தபின் இந்த எண்ணம் அதிகரித்தது. நோயைப் பாராட்டாமல் தன்னைப்போல் வேலை செய்ய எவராலும் முடியாது என்ற எண்ணம் அதிகரித்தது. ஆகவே, தனக்குப் பணிவிடை செய்ய வேண்டியது, குடும்பத்தில் இருப்பவர்களுடைய கடமை மட்டும் அல்ல, தர்ம கைங்கரியமுங்கூட என்றே அவன் தீர்மானித்துவிட்டான். தான் நோயாளியாக இருப்பதனால், தன்னிடம் பிறர் தாக்ஷிண்யமாக நடப்பார்கள்; அவர்கள்மேல் அதிகாரம் செலுத்தலாம் என்றும் தீர்மானித்துவிட்டான். சில வேளைகளில் அவனுக்கு ஒரு சந்தேகம்: 'நானோ நோயாளியாக இருக்கிறேன். முன்னே என்னுடைய கோபத்தை லக்ஷ்யம் செய்தவர்கள் இப்போது அலக்ஷ்யம் செய்துவிடுவார்களோ, பார்க்கலாம்!'

என்று அடிக்கடி கோபித்துக்கொள்வான். அதனால் அவனுடைய கோபம் அதிகரித்து வந்தது. வார்த்தைகளை மிதமிஞ்சிப் பேசுவான். வீட்டிலுள்ளவர்கள் அதைக் கேட்டு அதிகமாகத் துன்பப்படுவார்கள். பிறர் துன்பப்படுவதைப் பார்த்ததும் தன் துன்பத்தில் அவர்களும் பங்காளிகள் ஆகிறார்களே என்று மனமகிழ்ச்சி அடைவான். 'நான் மட்டும் துன்பம் அடைவானேன்? இவர்களும் அடையட்டுமே!' என்ற எண்ணம் அவனுடைய மன அயர்வுப் புலத்தில் இருந்தது.

முத்தையாவைப் போன்றவர்கள் தங்களுடைய வேதனைகளையே நினைத்துக்கொண்டிருப்பதால், அவர்களுக்குப் பிறருடைய வேதனையைப் பற்றிய எண்ணமே எழுவதில்லை. அப்படித் தப்பித் தவறி ஏற்பட்டுவிட்டாலும் கண்ணையும் மனத்தையும் இறுக மூடிக்கொள்வார்கள்.

# 5

# வேதனை அவசியந்தானா?

மனிதனுக்கும் அவனுடைய நிலைக்குக் கீழான பல நிலைகளிலே இருக்கும் பிராணி உலகத்திற்கும் பொதுவாக ஏற்படுகிற வேதனை, தற்காப்புக்காக மட்டுந் தானா? அல்லது வேதனை உண்டாவதற்கு வேறு ஏதேனும் உத்தேசம் உண்டா? 'துக்கம், துயரம், துன்பம் என்பனவற்றைப்போலவே வேதனையும் ஆத்மாவைச் சுத்தம் செய்வதற்காக ஏற்படுகிறது' என்று சிலர் கூறுகிறார்கள். 'கிருஷ்ணா, எனக்கு அடிக்கடி கஷ்டங்களைத் தந்துகொண்டே இருக்கவேண்டும். அப்போதுதான் நான் உன்னை எப்போதும் நினைத்துக்கொண்டே இருக்க முடியும்' என்று வேண்டிக்கொண்டாளே அந்தக் குந்தி தேவி, மகாபாரதத்திலே? பகவானை ஸதா ஸர்வகாலமும் நினைக்கிற பக்தர்களின் ஆத்மா சுத்தமடைந்துதானே ஆகவேண்டும்? வேதனையைப் பற்றி இன்னொரு கொள்கையும் உண்டு. நிழலின் அருமை வெயிலில் போனால்தானே தெரியும்? வேதனை, துயரம் முதலியவற்றை அநுபவிக்கிறவன் தான் சுகத்தையும் நன்றாக அநுபவிப்பான். குடல் வாட, உடல் வருந்தி உழைக்கிறவன்தான் பசியறிந்து, ருசியறிந்து உணவின் அருமையை அநுபவிக்க முடியும்.

பிரசவ வேதனை! மரண வேதனை! இவ்விரண்டையும் உலகிலுள்ள வேதனைகளுக்கெல்லாம் தலைமையான வேதனைகளாகக் குறிப்பிடுவதை நாம் அடிக்கடி கேள்விப் படுகிறோம். முதலாவது, பிரசவ வேதனையை எடுத்துக் கொள்வோம். பிரசவம் என்பது வேதனையோடு கூடிய சம்பவமாக என் இருக்கவேண்டும்? கறையானின்

ஆத்மா (The Soul of the White Ant) என்னும் மகா அற்புதமான ஒரு நூலை மரைஸ் (Marais) என்பவர் எழுதியிருக்கிறார். அவர் அந்த நூலில் கறையானுடைய வாழ்க்கை முழுவதையும் மயிர்க்குச்சிடும்படி விவரித் திருக்கிறார்; பல அதிசயமான விஷயங்களையும் வெகு நுட்பமான சம்பவங்களையும் வெளியிட்டிருக்கிறார்; அதோடு அனேக தத்துவ ஞான விஷயங்களையும் விளக்கு கிறார். கறையான் அரசி அல்லது தாய்க் கறையான் பிரசவிக்கும்போது அதன் உடலில் ஏற்படும் ஒருவகைச் சலனத்தைப் பிரசவ வேதனை என்கிறார். தாய்க் கறையானின் உடலிலிருந்து ஆயிரக் கணக்கான முட்டைகள் வெளிப்பட்டவுடனே, உணர்ச்சி இந் திரியங்களால் அது அந்தச் சம்பவத்தை உணருகிறது. இடவேண்டிய முட்டைகள் வெளிப்பட்ட பின்பு அது முட்டைகளின் நடுவிலே சலனமற்றுக் கிடக் கிறது. தாய்க் கறையான் விஷயத்தில் காணப்படும் இந்தச் சம்பவத்திற்கும் மனுஷ்யப் பிரசவ சம்பவத் திற்கும் அதிக வித்தியாசம் உண்டா? 'இல்லை' என்று தான் மரைஸ் சொல்லுகிறார். 'வேதனையின் தத்துவ ஞானம்' என்ற அதிகாரத்திலே பிரசவ வேதனையைப் பற்றிச் சொல்லுகிறபோது தேளின் பிரசவத்தைக் குறிப்பிடுகிறார். தேள் முட்டையிடாமல் குட்டித் தேள்களை வேதனையோடு பெறுகிறது; தன் குட்டி களிடம் அளவு கடந்த அன்பு பாராட்டி அவைகளைத் தன் முதுகிலே சுமந்து செல்கிறது; தானே பக்குவம் செய்து, தயாரித்த உணவை ஊட்டிக் குட்டிகளை வளர்க் கிறது என்றும், குடைபோலத் தன் கொடுக்கை, குட்டிகளின் மேலே தூக்கிப் பிடித்துக்கொண்டு அவற்றைக் காக்கிறது என்றும் கூறுகிறார்.

பிரசவ வேதனையை அபாயச் சங்கு ஊதுதலுக் குச் சமானமாகக் கருதலாமா? அப்படியானால் இந்த வேதனை எதற்காக ஏற்படவேண்டும்? வேதனையினால்

ஒருவேளை அபாயமும் நேரிடலாமே. ஆனால், பிரசவ வேதனை என்பது சந்ததி உலகத்தின்மேல் தாய் உலகத்திற்கு இயற்கையாகவே ஏற்படவேண்டிய ஒப்பற்ற ஓர் அன்புச் சக்தியை எழுப்புவதற்காகவே தோன்றுவதாகும். தாய் உலகத்திற்கும் சந்ததி உலகத்திற்கும் நெருங்கிய அன்புத் தொடர்பை ஏற்படுத்துவதற்கு இந்தப் பிரசவ வேதனை அவசியம் என்கிறார் மரைஸ். பிரசவ வேதனை இல்லாத பிராணிகள் தம் மக்களிடம் அன்பு பாராட்டுவதில்லை என்று ருஜுப்படுத்தப் பிராணி உலகத்திலிருந்து பல திருஷ்டாந்தங்கள் காட்டுகிறார்.

கறையான், பூச்சி, தேள் என்று இப்படியே கண்ணாலே பார்க்கக்கூடிய பிராணிகளுக்குத்தாமா பிரசவ வேதனை? கண்ணுக்குத் தென்படாத பிராணிகள், பிரசவ வேதனைக்கு உட்படவில்லை என்று எப்படிச் சொல்ல முடியும்? அணு ஜீவன்கள் இரண்டு துண்டுகளாகப் பிரியும்போது வேதனையில்லை என்று யாராலே துணிந்து சொல்ல முடியும்? முடியாது.

இவ்வுலகில் வாழும் ஜீவராசிகள் அனைத்தும் வேதனையிலேயே பிறக்கின்றன. வேதனையை அநுபவிப்பதனாலேதான் ஜீவிக்கின்றன. கடந்து போகும் பிராணி மண்டலம், வேதனையோடு புதிய பிராணி மண்டலத்தைப் பெறுகிறது. கடந்து போகிற பிராணிக்கும் பிறக்கிற பிராணிக்கும் அன்புத் தொடர்பை உண்டுபண்ணுவது வேதனை. இறந்து போகிற உயிர், தனக்குப் பிறக்கும் உயிரிலே இறவாமல் வாழ்வதற்காக ஏற்படுகிற வேதனை பிரசவ வேதனை. அபாயத்திலிருந்து உயிரைக் காத்து, உடலைப் பேணுவதும் வேதனையே. உடலுக்கும் உயிருக்கும் ஒரு தொடர்பை ஏற்படுத்துகிற பசியும் ஒரு வேதனையல்லவா? பசிப் பிணி என்று சொல்லுகிறோமே! இந்தப் பசிப் பிணியினால் அல்லவா உயிர்கள் உணவைத் தேடிச் சேகரித்து வைக்க முயலு

கின்றன? உறுப்பு ஒன்றில் காயம் பட்டால் அதைக் காப்பாற்றிச் சொஸ்தப்படுத்தும் வழிகளைத் தேடச் செய்வது வேதனை அல்லவா? புதிய உயிர் பிறப்பதிலே ஒரு மகிழ்ச்சி; இந்த மகிழ்ச்சி வேதனையிலே பிறக்கிறது. அப்படியானால் வேதனை, வேதனையா?

மரண வேதனையைப்பற்றியும், மரணத்தை மனிதன் ஏன் அடைகிறான் என்பதைப்பற்றியும் தனி அதிகாரங்களில் பார்க்கப் போகிறோம். பிறப்பும் வேதனை, இறப்பும் வேதனை; இவ்விரண்டிற்கும் இடைப்பட்ட வாழ்க்கையும் வேதனை என்று ஒரு வேதனை வேதாந்தத்தைச் சிருஷ்டிக்கலாமா? இப்படி ஒரு வேதாந்தத்தைச் சிருஷ்டித்துக்கொண்டு மனங் கசந்த பார்வையோடு இதிலிருந்து விடுதலை அடைய வேண்டுமென்று ஒரு முக்தி மார்க்க சித்தாந்தத்தை நிலை நாட்டலாமா? மோட்ச இன்பத்தைத் தேடுவதிலும் வேதனை உண்டு. சிற்றின்பத்திற்கும் பேரின்பத்திற்கும் வாயிலாக இருப்பது வேதனை. வாழ்வுக்கும் அன்புக்கும் வழிகாட்டியாக இருப்பது வேதனை. அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் விஷம் என்பார்கள். அளவுக்கு மிஞ்சிய வேதனை உயிருக்குக் கேடாகலாம். உலகப் போக்குக்குக் கேடாகலாம். ஆனால், இயற்கை ஒருபொழுதும் அப்படிப்பட்ட நிலை வருவதற்கு இடம் கொடுப்பதில்லை.

6

# மரண பயம்

**ம**ற்றப் பிராணிகளின் வாழ்வைப்போலவே மனித வாழ்வும் அபாயம் நிறைந்தது. வாழ்க்கை ஒரு மெல்லிய நூலிலே தொங்குவதாகக் கருதலாம். விதி, தன் இஷ்டப் படி இந்த ஆதார நூலை அறுத்துவிடலாம். இதனாலே தான் நாம் இரவில் எதாகிலும் ஒரு விஷயத்தை யோசனை செய்யும்போது வழக்கமாகப் 'பிழைத்துக் கிடந்தால் பார்ப்போம்' என்று சொல்லுகிறோம்.

நாகரிகமின்றிக் கானகத்தில் திரிந்த மனிதன் இடி, மின்னல், வெள்ளம், நெருப்பு இவைபோன்ற இயற்கைச் சக்திகளைக் கண்டு பயந்தான். ஆனால், இப்பொழுது நகரங்களில் நாகரிகமடைந்து வாழும் மனிதனோ, இயற்கைச் சக்திகளெல்லாம் தன் ஆட்சிக்கு அடங்கிவிட்டதாக எண்ணுகிறான். பூமண்டலத்திற்கே வேந்தன் என்று தன்னை முடி சூட்டிக்கொள்கிறான். இவ்வாறு கருதும் நாகரிக மனிதனுக்கும் எதிர்பாராத ஆபத்துக்கள் நேரிடுகின்றன.

பயம் என்ற மனநிலை மனிதனுக்குப் பிறவியிலிருந்தே இயல்பாகத் தோன்றுகிறது. பயம் இருந்தால் தான் நாம் நம்மைக் காத்துக்கொள்ளும் சில காரியங்களைத் திடீரென்று செய்ய முற்படுகிறோம். பயத்துக்கு எது காரணமோ அதைக் கண்டு ஓடவோ எதிர்க்கவோ முயல்கிறோம். இது அறிவுடைய மனிதன் செய்யும் செய்கை. அவனுடைய உடலில், அவனுக்குத் தெரியாத சில சேஷ்டைகள் காணப்படும்: கண் இமைப்பற்று நிற்கும்; இருதயம் படபடவென்று அடிக்கும்; வயிறு பதைக்கும்; உடம்பு முழுவதும் வேர்த்துவிடும்; மயிர்க்

குச்சிடும்; கைகால் குளிர்ந்துவிடும்; நாக்கு உலர்ந்து போகும். சரீரத்தில் ஏற்படும் இந்தச் சேஷ்டைகளின் உக்கிரம், பயத்தின் அளவைப் பொறுத்தது. இவை யாவும் உயிருக்கு நேரிட இருக்கும் ஆபத்தைத் தடுப்ப தற்காகத் தோன்றுவன. ஆகையால் பயம் என்ற மன நிலை நமக்கு மிகவும் அவசியந்தான்.

பயம் என்பது அளவுக்கு மிஞ்சினுல் அபாயத்திற் குக் காரணமாகும். இந்த நிலையில் இன்னது செய்வது என்று தெரியாமலே ஸ்தம்பித்துப்போய், எதிர்த்து வரும் ஆபத்துக்கு இரையாகலாம். மனிதனுடைய விசேஷமான பகுத்தறிவே அவனுக்குச் சில தருணங் களில் அநாவசியமான பயத்தையும் விளைக்கிறது. மனிதன் இந்த அறிவைச் சரியான வழியில் பிரயோகிக் காமல், விபத்தும் கஷ்டமும் எப்படியெல்லாம் வரக் கூடும் என்பதையே எண்ணி எண்ணிப் பயத்தை விருத்திபண்ணி, வேண்டாத மன வேதனைக்கும் துன்பத் திற்கும் தன்னை ஆளாக்கிக்கொள்கிருன்.

அறிவினுல் பயம் வளர்வதுபோல், அறிவினுலேயே பயம் தெளிந்தும்விடுகிறது. உதாரணமாக, இருளில் ஒருவன் ஒரு மரக் கட்டையைக் கண்டு, 'அது என்னவோ?' என்று பயப்படுகிருன். அருகில் சென்று பார்த்ததும் அது மரக்கட்டை என்று அறிந்து பயம் தெளிகிருன்.

ஒருவனுக்கு வாழ்வு எவ்வளவு கஷ்டமாக இருந்த போதிலும், முடிவு காலம் நெருங்கும்போது, 'முடிவு வந்துவிட்டதே!' என்று அவன் பயப்படுவான். மரணு வஸ்தையை எண்ணித்தான் அவ்வாறு பயப்படுகிருன். மரணுவஸ்தையை அறிந்துகொள்ளச் சந்தர்ப்பம் கிடைப்பது அரிது. மரணுவஸ்தையை அநுபவித்துப் பிழைத்த ஒருவனே, 'அது எவ்வாறு இருந்தது?' என்று கேட்டதற்கு அவன், 'நான் பரம சுகத்தை அநுபவித் துக்கொண்டிருக்கையில் என்னை எழுப்பி, நோவும் துயர

மும் நிறைந்த வாழ்க்கைக்குத் திருப்பிக் கொண்டு வந்தார்களே!' என்றான். மரணாவஸ்தை உண்மையில் துயரமற்றது. துயரம் இல்லாமல் இருப்பதற்குக் காரணம், மரணம் சம்பவிக்கும் முன் மூளையில் ரத்தக் குறைவு ஏற்பட்டுப் பிரக்ஞையற்றுப் போவதேயாம். நோவுக்கும் துயரத்திற்கும் உரிய உணர்ச்சி நாம்புகள் வேலை செய்யா; உடல் மரத்துவிடுகிறது. மரணாவஸ்தையைப் பார்ப்பவர்களுக்குத்தான் மரண பயம்.

மரணம் ஒரு குடும்பத்தில் நேர்ந்தால், அதைக் கொண்டாடுவது அவர்கள் ஜாதிப் பழக்கத்தைப் பொறுத்தது. கிறிஸ்தவர்கள் அதிக ஆடம்பரமில்லாமல் பிணத்தைப் புதைக்கிறார்கள். முகம்மதியர் இறந்தவரை மௌனமாக அடக்கம் செய்கிறார்கள். இந்துக்கள் ஏகக் குழப்பம் செய்து, அழுது, புரண்டு, பின்புதான் தகனம் செய்கிறார்கள். உலக வாழ்க்கையை அநுபவிக்கக்கூடிய நிலையில் இருக்கும் சிறுவர்கள் இறந்தாலும் சரி, உலக வாழ்க்கையில் பலவகையான இன்ப துன்பங்களை அநுபவித்த வயோதிகர்கள் இறந்தாலும் சரி, இந்துக்களின் வீடுகளிலே இந்த அழுகையும் புலம்பலும் சாகசமும் உண்டு. யூதர்களும் இந்துக்களைப்போல் சாகசம் செய்வார்கள் என்று தெரிகிறது.

லார்டு டென்னிஸன் (Lord Tennyson) என்ற ஆங்கிலக் கவி ஒரு கவிதை எழுதியிருக்கிறார். ஒரு வீரன் யுத்த களத்தில் இறந்துவிடுகிறான். அவன் பிணத்தை வீட்டிற்குக் கொண்டுவந்ததும், அவன் மனைவி துக்கத்தால் ஸ்தம்பித்து நிற்கிறாள். அவளுடைய தோழிகள், அவள் ஆறாத் துயரமடைந்து இறந்துவிடுவாள் என்று எண்ணி, அவள் அழுவதற்காகப் பல உபாயங்களைத் தேடுகிறார்கள். ஒன்றும் பயன் தரவில்லை. கடைசியாக ஒரு தொண்டு கிழவி, அவளுடைய குழந்தையை எடுத்து அவள் மடியில் வைக்கிறாள். 'என் கண்ணே! உனக்காக என் உயிரைக் காப்பாற்றிக்கொள்

கிறேன்' என்று சொல்லிக் குழந்தையைத் தழுவி முத்த மிட்டுத் தாரை தாரையாகக் கண்ணீர் விடுகிருள். துக்கத்தை அடக்கினல் சில தருணங்களில் உயிருக்கே ஆபத்து விளையும் என்பது இதன் கருத்தல்லவா? வாய் விட்டு அலறித் துக்கத்தைத் தீர்க்க வேண்டும் என்றல்லவோ இந்துக்களும் யூதர்களும் அழுது துக்கத்தை ஆற்றிக்கொள்கிருர்கள்? அழுது புரளுவது அநாகரிகமான செய்கைதான். கிறிஸ்தவர்களின் சாவுக் கொண்டாட்டமே மேன்மையான முறையாகும். ஆத்மா, உடலைவிட்டுப் பிரிந்தபின் தனிமையாக உலவிக்கொண் டிருக்கிறதாம்: பிறகு பரமண்டலம் அடையும்போது பூமியில் புதைத்திருக்கும் உடலுடன் ஆத்மா சேர்ந்து, கடவுள் சந்நிதானத்தை அடைந்து, தன் கர்மத்துக்குரிய அநுபவங்களை அடைகிறதாம். இந்தப் பிரச்னைகளை இங்கே நாம் தீர்க்கவேண்டியதில்லை. ஒன்று மட்டும் நிச்சயமாகக் கூறலாம். அதாவது, கிறிஸ்தவக் கொண் டாட்டத்தினலே, இறக்கப் போகும் மனிதனுக்குப் பயம் குறைந்துபோகிறது. இறந்தவனுடைய உறவின ருக்கும் சிநேகிதர்களுக்கும் ஆறுதல் உண்டாகிறது. இறந்தவன் பரமண்டலத்தில் சௌக்கியம் அடைகிருன், அவனுடைய ஆவி அதுவரையில் புவியில் உலவுகிறது; சுற்றத்தாரைக் காக்கிறது என்று அவர்கள் எண்ணு கிருர்கள். இறந்தவனுக்குப் பொறுமையுடனும் வணக் கத்துடனும் மரணக் கொண்டாட்டம் நடத்துகிருர்கள்.

முகம்மதியருடைய சாவுக் கொண்டாட்டமும் சிறந்ததுதான். 'மனிதன் உலகத்தில் சகல கஷ்டங்களை யும் அநுபவித்தாகிவிட்டது. கடவுளை நம்பிச் சகல கர்மங்களையும் செய்தான். அவன் சுவர்க்கத்தில் சகல சுகங்களையும் அநுபவித்துக்கொண்டு கஷ்டமில்லாமல் வாழ்வான். நாம் என் துயரமடைய வேண்டும்? சந்தோஷமாய் வழியனுப்புவோம்' என்று கருதுகிருர் கள். அவர்கள் இறந்தவர்களுக்காகத் துக்கம் கொண்

டாடுவதில்லை. இப்படிப்பட்ட நோக்கம் உயர்தர நோக்கமே. இதனால் மரணம் வருகையில் பயம் ஏற்படுவதில்லை.

இறந்தவனுடைய உடலைப் புதைக்கலாமா, கழுகுக்குக் கொடுக்கலாமா, எரிக்கலாமா? இந்தப் பிரச்னையைத் தீர்ப்பது எளிதன்று. இதைத் தீர்க்க முயன்றால் மதவாதிகள் கையில் சிக்கிக்கொண்டு அவஸ்தைப்பட வேண்டியதுதான். ஒவ்வொரு வித அநுஷ்டானத்துக்கும் உட்கருத்து இருந்தே தீரும். மூன்றுவித அநுஷ்டானங்களும் ஒரு நோக்கத்தையே கொண்டவை. அதாவது, பிணத்தை வைத்திருந்தால் சீக்கிரமாக நாற்றமெடுக்கும்; ஆகையால் பிணத்தை மண்ணோடு மண்ணாக்கவோ, வேறு உயிருக்குப் பயன்படச் செய்யவோ, எரித்துச் சாம்பலாக்கவோ செய்கிறார்கள். பாரசீகர்கள், இறந்தவனுடைய உடல் பயன் அடையட்டும் என்று கழுகுக்குக் கொடுக்கிறார்கள். பிணத்தைப் புதைப்பதைவிட எரிப்பது ஒரு நல்ல செய்கைதான். பூமியில் பிணங்களைப் புதைக்க ஏராளமான இடம் வேண்டும். பூமிக்குள் உடல் எளிதில் லயமாவதில்லை. உடலை எரித்துவிட்டால் இந்தத் தொல்லை இராது. பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என்ற பஞ்ச பூதங்களால் ஆன மனித சரீரம் இறந்தபின் சீக்கிரமாகப் பஞ்ச பூதங்களாகவே மாறிவிடுவது நலமல்லவா?

மரணபயத்தைக் குறித்துச் சொல்ல வந்த நான், பிணத்தைப் புதைப்பதையும் எரிப்பதையும்பற்றிச் சொல்ல வேண்டுமா என்று கேட்டால், அதுவும் அவசியந்தான் என்று சொல்லலாம். இதன் சூக்ஷ்மத்தையும் தெரிந்துகொண்டால் மரண பயத்தைச் சற்றுக் குறைத்துக்கொள்ளலாம்.

'நமனை யஞ்சோம் நரகத்தில் இடர்ப்படோம்!' என்று கூறிப் பயப்படாமல் வாழ் நாட்களை நடத்துவோம். மரணம் வந்தால் தயாராக இருப்போம்.

7

# முதுமை வந்தால் என்ன?

'தலை நரைத்துப் போச்சே, ஜரையும் வந்தாச்சே!' என்ற கவலை யௌவனம் முடிவதற்கு முன்னமேயே வரத் தொடங்குகிறது. ஆயினும், நாம் நமது மனத்தைத் திடப்படுத்திக்கொள்கிறோம். 'இன்னும் அவ்வளவாக வரவில்லை' என்று சொல்லிக்கொண்டே உடலைப் பாது காத்து வருகிறோம். 'தேக வலிமை முன்போலவே இருக்கிறதா'? என்று பார்க்கிறோம். 'வலிமை குறைய வில்லை' என்று திருப்தி அடைகிறோம். இருந்தபோதி லும் ஒரு சங்கை நிச்சயமாக உண்டாகலாம். அப் பொழுது, கதைகளில் படிக்கும் அரசரைப்போல் மந்திரியைக் கூப்பிட்டு யோசனை கேட்க முடியுமா? அல்லது அமிர்த சஞ்சீவியைத் தேடிப் போகத்தான் முடியுமா?

முதுமை என்பது வந்தே தீரும். ஆனால் கவலைப் பட்டு அதைச் சீக்கிரமாக வரவழைக்க வேண்டாம்.

பயமென்பது, அறியாமையினால் உண்டாகலாம். முதுமையைப்பற்றிய பயமும், அப்படியே ஏற்படலாம். முதுமையைப்பற்றிய சரியான அறிவு ஏற்பட்டால் அந்தப் பயமும் நீங்கிவிடலாம்.

ஜரை என்பது என்னவென்று சற்று விசாரிப் போம். முதுமை என்ற நிலை, மனிதனும் மற்றப் பிராணி களும், பிறந்து, வளர்ந்து, மூத்து, மரண தசை அடைந்து சாவிலே முடிவடைகிற பருவமே ஆகும். 'முதுமை எல்லா ஜீவராசிகளுக்கும் ஏற்படுவதா?' என்று கேட் டால், இல்லை என்றுதான் சொல்ல வேண்டும். அணு ஜீவன்கள் எந்நாளும் அழிவில்லாமல் வாழ்கின்றன

என்று பிராணி உலக விஞ்ஞானிகள் கூறுகிறார்கள். அணு ஜீவன்கள் என்றும் யௌவன நிலையிலேயே இருக்கக் காரணம் உண்டு. அவை தத்தம் உடலைப் பகுதி பகுதியாகச் செய்துகொண்டு, பெருகும் குண முடையவை. அவைகளின் உடல் பகுதிகளாகப் பிரியும் போது, இரண்டு பகுதிகளும் தனித்தனி உயிர்களாக அமைகின்றன. ஜரை வரும் முன்னமேயே இரு பகுதி களாகப் பிரிந்து விடுவதனால், இவைகளுக்கு ஜரையே வருவதில்லை. நாம் நினைக்கிற கருத்திலே மரணமும் ஏற்படுவதில்லை. இப்படிப் பகுதிகளாகப் பெருகி வளரும்போது ஓரளவுக்குமேல், பெருகும் சக்தி குறைந்து நாசம் அடையக்கூடும். இந்தச் சந்தர்ப்பத் தில் ஓர் அதிசயமான சம்பவம் நிகழ்கிறது. அதாவது, இரண்டு அணுஜீவன்கள் ஒன்றோடொன்று ஒட்டிக் கொண்டு, ஒரே ஜீவனாகி மாறிவிடும். அப்போது, அவை களுக்குள்ளே ஒன்றிலிருக்கும் மூல வஸ்து மற்றொன் றின் மூல வஸ்துவோடு கலக்கிறது; பிறகு, அவை இரண்டு புதிய மூலவஸ்துக்களாகப் பிரிந்துவிடுகின்றன. பின்பு அணு ஜீவன்கள் இரண்டும் தனித் தனியே பிரிந்துபோகும். திரும்பவும் புதிய வலிமையுடன் பிளவுற்றுப் பெருகத் தொடங்கும்.

இத்தகைய அணு ஜீவன்களைப்போன்ற பல அணுக்கள் அடங்கியது நமது உடல். அப்படியானால் நமது சரீரம் ஏன் முதுமையை அடைய வேண்டும்? காரல் (Carrel) என்ற அமெரிக்க விஞ்ஞானி, சில ஆராய்ச்சிகள் செய்திருக்கிறார். கோழிக் குஞ்சின் இருத யத்திலிருந்து அணுக்களை எடுத்துத் தகுந்த கருவியில் வைத்து, போஷிப்புக்கு வேண்டிய உபாயங்களைத் தேடிச் சுமார் முப்பது வருஷங்களாகக் காப்பாற்றி வருகிறார். ஆனால், ஆதியில் வைத்த அணுக்கள், இப் போது பழைய உருவத்துடன் இருக்கவில்லை. பகுதி பகுதிகளாகப் பிரிந்து, அநேக அணுக்களாகி இன்னும்

உயிரோடு இருக்கின்றன. ஆகவே நமது உடலை அமைக்கும் கோடிக்கணக்கான அணுக்களுக்கும் இத்தகைய அழிவற்ற வாழ்வு உண்டென்று தீர்மானம் பண்ணலாம். இவை உடலில் இருக்கும்போது, அந்தச் சக்தி வெளிப்படுவதில்லை. கோழிக் குஞ்சின் இருதய அணுக்கள் கோழிக் குஞ்சில் இருக்கும்போது அழிவில்லா வாழ்வு ஏற்படுவதில்லை. இதற்குக் காரணம் என்னவென்றால், கோழிக் குஞ்சின் உடலில், இந்த அணுக்கள் அமைந்திருக்கும் இயல்புதான். இவ்வாறான ஓர் இயல்பிலேதான் நமது உடலில் இருக்கும் அணுக்களும் அமைந்திருக்கின்றன.

உடலில் அமைந்திருக்கும் அணுக்கள், உடல் வளர்ச்சி, பாதுகாப்பு, உழைப்பு முதலிய செயல்களுக்கு ஏற்றவாறு பலவித மாறுபாடுகளை அடைகின்றன. வட்டமான வடிவம், நீண்ட வடிவம், தட்டை வடிவம், கொம்பும் கவருமாகப் பிரிந்த வடிவம், இப்படிப் பல வடிவங்களை அடைகின்றன. உணவுக்கும் உணர்ச்சிக்கும் வேலை செய்யத் தூண்டுவதற்கும் உயிர்வாழ்வுக்கு அவசியமான இதர உழைப்புக்கும் தனித் தனி அணுக்கள் வேண்டும். ஏதாவது ஒரு வகுப்பிற்குக் குறைவு வந்தால் மற்ற எல்லா அணுக்களுக்கும் கேடு வரக்கூடும். இதனால்தான் நமது உடலில் இருக்கும் அணுக்களுக்கு அழிவில்லா வாழ்வு இருப்பதில்லை. குழாய்கள், சரிவர இருதயத்திலிருந்து ரத்தத்தை எல்லா அவயவங்களுக்கும் கொண்டுபோகவிட்டால், அந்த அந்த அவயவ அணுக்கள் போஷிப்பில்லாமல் நாசமடையும். உணர்ச்சி நரம்புகளும், மூளைச் சோற்றிலிருக்கும் அணுக்களும் கொஞ்ச நேரங்கூட ரத்தம் இல்லாமல் இருக்க முடியாது. அதுபோலவே, ஓய்வு ஒழிவில்லாமல் வேலை செய்யும் இருதயமும், போதிய அளவு ரத்தம் அகப்படாவிட்டால் சில நிமிஷங்கள்கூட வாழ முடியாது. இருதயம் அடிக்காமல் நின்றுவிடும். நமது வாழ்வும்,

நம்மைப் போன்ற அமைப்புள்ள பிராணிகளின் வாழ்வும் இத்தகைய சிக்கல்களை உடையவை; ஆகையால் இந்தப் பிராணி வர்க்கங்களைக் காப்பாற்றுவதற்காக இயற்கை ஓர் உபாயம் செய்திருக்கிறது. நமது உடலிலும், நம்மைப் போன்ற பிராணிகளின் உடலிலும் சில அணுக்களை முடிவில்லாத வாழ்வுக்காகப் பிரித்து வைத்திருக்கிறது. சந்ததியின் பாரம்பரியத்துக்காக இந்த அணுக்கள் ஏற்பட்டவை. இவைகளுக்குக் கேடு வராதபடி ஜனன அவயவங்கள் காக்கின்றன. சம்போக காலங்களில் இந்த அணுக்கள் வெளிப்பட்டு, ஆண் அணுவும், பெண் அணுவும் ஒன்று சேர்ந்து, ஒரே அணுவாக உருவாகிறது. பின்பு தாயின் கர்ப்பாசயத்தில் வளர்ந்து, தாய் தந்தையருடைய உருவத்தை அடைகிறது. தாயின் வயிற்றில் வளரும் சிசுவின் உடலுக்குள்ளும் சில அணுக்கள் அழிவில்லா அணுக்களாகி, முன்னே சொன்ன முறையிலே விபாகம் அடைகிறது. இப்படிப் பிரித்து வைக்கப்படும் பீஜ அண்ட அணுக்களில், அணுக்களின் எல்லாக் குணங்களும் அடங்கியிருக்கும்.

ஆகவே, உடலில் இதர அணுக்கள் மாறுபாடு அடைந்து வளரும்போது முதுமை அடைந்தால் என்ன? உண்மையில் பிராணி நாசம் அடையவில்லையே? சந்ததியின் மூலமாகப் பிராணியின் இளமை ததும்பும் வாழ்க்கை தொடருகிறதல்லவா? சந்ததிகளைப் பெற்ற பின் உடல் நாசம் அடைந்தால் என்ன? முதுமை அடைந்த உடல் இறந்தால் என்ன? சந்ததியாகிய புதிய உடலில் பெற்றோரின் உயிர்ப்பாகம் பூர்ணமாக விளங்கவில்லையா? தாய் தந்தையர் தம் குழந்தைகளுக்காக உயிரையே இழக்க ஆயத்தமாய் இருப்பதேன்? 'பெற்ற மனம் பித்து, பிள்ளை மனம் கல்லு' என்று ஏன் கூறுகிறார்கள்? தன் உயிரே தன் பிள்ளையிடம் விளங்குவதைப் பார்க்கிறாள் தாய். தன்னுயிர் அழி

வில்லாமல் இருக்க வேண்டுமானால், தன் பிள்ளை சுகமாக வாழ வேண்டும் என்கிறாள். ஆணுக்கும் பெண்ணுக்கும் பிறக்கும் ஆண் பெண் சந்தானங்களிலே அவரவர்களுடைய உயிர், இளமை குன்றாமல் காக்கப்படுவதனாலேதான், மக்களைப் பெறுவதிலே குதூகலம் அடைகின்றன ஸர்வ ஜீவராசிகளும்.

மனித உயிர் ஆதியந்தம் இல்லாத ஆறுபோல விளங்குகிறது. ஆரம்பத்தில் ஒரு சிற்றாறாக இருந்த போதிலும் அதில் அளவற்ற துளிகள் உண்டு. பின்பு, சிற்றாறுகள் பல சேர்ந்து, பெரிய நதியாகிப் பெரு வெள்ளம் ஆகிறது. இதைப்போலவே மானிட உயிர்ப் பிரவாகம் பெருகிக்கொண்டே போகிறது. உயர்ந்த மனப்பான்மையுடைய மனிதனுக்கு எல்லா உயிர்களிடத்திலும் கருணை உண்டாவதற்கு முக்கியமான காரணம் ஒன்று உண்டு. பல ஜன்மங்களை எடுத்து, முடிவிலே, தற்காலப் பிராணி மண்டலத்திலேயே மகோன்னதமான உடலை அடைந்தவன் மனிதன் என்ற உணர்ச்சியே இந்தக் கருணைக்குக் காரணம் என்று சொல்லலாம். அப்படிப்பட்ட மனிதன் தன் உயிர், எல்லாப் பிராணிகளிலும் பரவியிருப்பதை உணர்கிறான். அவனே மகாத்மா என்று சொல்லாம். அப்படிப்பட்ட மகாத்மா தனக்கு முதுமை வருவதைக் கண்டு பயப்படமாட்டான். மரணம் நேர்ந்தாலும் மனத்தைத் திடப்படுத்திக்கொண்டு ஆனந்த பரவசம் அடைந்திருப்பான்.

மரணம் அடையாதபடி உயிர்ப் பிரவாகத்தைக் கடவுள் வைத்திருப்பதன் உத்தேசம் என்ன? மரணம் இல்லாமல் மகாத்மாக்களை வைத்துக் காப்பதன் உத்தேசம் என்ன? மரணம் அற்ற உயிர்ப் பிரவாகத்தாலும் அமரர்களான மகாத்மாக்களாலும் உலகில் நடைபெற வேண்டிய காரியம் ஏதோ இருக்கிறது என்பது வியக்தம் அல்லவா?

# 8

# முதுமையின் அடையாளங்கள்

முதுமை என்பது என்ன? எப்போது அது ஆரம்பமாகிறது? இதை வரையறுத்துச் சொல்வது கஷ்டந்தான். அணுஜீவன்களுக்கு முதுமை என்பதே கிடையாது என்று சொன்னேம். ஜீவராசிகளில், அணு ஜீவன்களுக்கும் உயர்ந்த நிலையிலுள்ள மரம், செடி, கொடி களாகிற தாவரங்களுக்கும் பிராணிகளுக்கும் முதுமை உண்டா என்று கேட்டால், சில உயிர்களைத் தவிர மற்றெல்லா உயிர்களுக்கும் முதுமை உண்டு என்றே சொல்லவேண்டும். இயற்கை விதிப்படி மரணமுள்ள உயிர்களுக்கெல்லாம் முதுமையும் உண்டு. கால சக்கரம் சுழலும்பொழுது, மனிதனுடைய உடலிலும் அவனைப்போன்ற சில பெரிய பிராணிகளின் உடலிலும் சில மாறுபாடுகள் உண்டாகின்றன. உடலின் சகல உறுப்புக்களும் வலிமை குன்றி, உண்ணும் உணவு குறைந்து, மரணத்தை எதிர்பார்த்திருக்கும் நிலைமையே முதுமை எனப்படும். எந்த வயதில் முதுமை ஆரம்பிக்கிறதென்றால், யௌவனம் முடிந்தவுடனே முதுமையின் ஆரம்பந்தான் என்பர் சிலர். ஜீவகோடிகளில் மனிதர்களை மட்டும் பார்ப்போமானால் அறுபது வயதிற்கு அப்பால் முதுமை ஆரம்பித்துவிட்டதாகவே சொல்லலாம். என்றாலும் இது எப்பொழுது ஆரம்பிக்கிறது என்று உறுதியாகச் சொல்ல முடியாது.

முதுமை அடையாத பிராணிகளின் வாழ்வைச் சற்றுக் கவனிப்போம். புரோட்டோஸோவா என்னும் அணு ஜீவன்களும் பாக்டிரியாக்களும் அழிவில்லாத வாழ்வை உடையவை. இவை முதுமை ஏற்படுவதற்கு முந்தியே பகுதிகளாகப் பிரிந்து வளர்கின்றன என்று

தெரிந்துகொண்டோம். கூட்டு வாழ்வு என்னும் இயற்கை நிலை வரும்பொழுது, வாழ்வுக்குத் தேவையான காரியங்களைச் சுயமாகவே செய்து வந்தது போக, மற்ற அணு ஜீவன்களின் உதவியைத் தேடும் நிலைமை வந்துவிடுகிறது. அப்பொழுது வாழ்வுக்குச் சில அபாயங்கள் ஏற்படக்கூடும். கூட்டு வாழ்வில் ஒத்துழைப்பு இல்லாவிட்டால், சுய வாழ்வை நடத்தத் திறம் பெற்றிருப்பது நல்லதல்லவா?

சைஃபனேஃபிரா என்ற பிராணிக்கு இந்தச் சக்தி உண்டு. இது நீரில் வாழும் பிராணி. இது பல ஜீவாணுக்களின் சேர்க்கையால் ஆனது. இந்தப் பிராணியின் அம்சங்களான ஒவ்வோர் அணுவுக்கும் தனியே வாழ்வதற்கு ஏற்ற சகல குணங்களும் உண்டு. சில தருணங்களில் பல சைஃபனேஃபிராக்கள் ஒன்று சேர்ந்து ஒரே பிராணியாகவும் வாழும். இப்பொழுது அவற்றின் உடலை அமைக்கும் அணுஜீவன்கள் சுயநிலையை மாற்றிக் கொண்டு கூட்டுவாழ்வுக்கு ஏற்ற முறைகளைக் கையாளுகின்றன. சில அணுக்கள் சேர்ந்து, வாய் என்னும் உறுப்பாகிவிடும்; வேறு சில, ஜீர்ணக்கருவி போன்றதோர் உறுப்பாக உருக்கொள்ளும்; மற்றும் சில நீந்துதல், சம்போகம் பண்ணுதல், மலஜலம் கழித்தல் என்று இப்படியே பல தொழில்களைச் செய்யும் அங்கங்களாக அமையும். இப்படிப் பலவிதத் தொழில்களை ஏற்றுக்கொள்வதனால் தனி வாழ்வை இழந்தவைபோல இவை காணப்படும். இந்த நிலையிலிருக்கும் கூட்டுப் பிராணியைத் துண்டு துண்டாகப் பிரிக்கலாம். அப்படிப் பிரித்தால், ஒவ்வொரு துண்டும் தனித்தனி சைஃபனேஃபிராவாகப் பிரிந்து, கூட்டு வாழ்வை மறந்து, தனி வாழ்க்கை நிலையைத் திரும்பவும் ஏற்றுக்கொள்ளும். ஆகவே இந்தப் பிராணியைப்போன்ற ஜீவராசிகளுக்கு முதுமை இல்லை; மரணமும் இல்லை. இந்தப் பிராணிகளுக்கும் உயர்ந்த நிலையில் அமைந்திருக்கும்

கூட்டுப் பிராணிகளுக்கும், இத்தகைய பிரிந்த நிலை ஏற்பட்ட பிறகு பூர்வாசிரம வாழ்வை ஏற்றுக்கொள்ளும் சக்தி இல்லை. இதனாலே கூட்டு வாழ்வுக்கு உண்டான தோஷங்கள் சம்பவிக்கக் கூடும். உணவுக்காக உள்ள அவயவங்கள், ரத்த ஓட்டத்துக்குள்ள அவயவங்கள் என்பவற்றுள் ஏதாவது ஒன்று சரியாக வேலை செய்யா விட்டால் மற்ற எல்லா அவயவங்களுக்கும் கஷ்டம் நேரிடும். இவற்றிலிருக்கும் ஜீவாணுக்களும் மாண்டு போகக் கூடும்; அல்லது அவைகளுக்குச் சக்திக் குறைவு ஏற்படக் கூடும்.

இப்படிப்பட்ட காரணங்களினால் சக்திக் குறைவு ஏற்படும்போது முதுமை அடையும். முன்பிருந்த சக்தியைத் திரும்பப் பெற முடியாமல் போய்விடும். இப்படி அங்கங்களும் அவயவங்களும் தளர்ந்து போகும்போது தான் பெரிய பிராணிகள் முதுமை அடைகின்றன. அப்பொழுது மரணம் சம்பவிக்கக் கூடும். பிராணிகளுடைய சந்ததி விருத்திக்குத் தடங்கல் வந்துவிடும் என்றுதான், தாயின் வயிற்றில் சிசு ஜனனம் ஏற்படுகிறது. ஆணிலும் பெண்ணிலும் ஜனனம்சங்கள் சந்தான உற்பத்திக் கென்று காக்கப்படுகின்றன. முதுமை இயற்கையாகவே வரக்கூடியது. ஆனால் தொத்து நோய்களும விபரீதமான சூழ்நிலைகளும் முதுமையைத் துரிதப்படுத்துகின்றன. பூர்வஜன்ம வாசனையினால் விரைவாகவோ மெதுவாகவோ மனிதனுக்கு முதுமை வருகிறது. வம்சத்தில் தீர்க்காயுசு இருந்தால் தீர்க்காயுசைச் சந்ததியிலும் பார்க்கலாம். சிறு வயதில் வளர்ச்சிக்கு வேண்டிய அளவில் மூலாதார உணவுச் சத்துக்கள் கிடைக்காவிட்டால், திருத்த முடியாத வளர்ச்சிக் குறைவு வந்துவிடும். முதுமையும் பாலியத்திலேயே தோன்றிவிடும். மனப்பான்மை உடலின் சுகநிலையை மாற்றிவிடும் என்ற விஷயம் இப்பொழுது அறிவாளிகளுக்குத் தெரிந்ததே. இந்தக் காலத்து நாகரிக வாழ்க்கையாலும் வாழ்க்கைப்

போராட்டங்களினாலும் கல்விப் பயிற்சியினாலும் பலவித மான மனக் கிலேசங்கள் ஏற்படுகின்றன. இவை தேகத்தின் சுக நிலையைக் குறைத்து, முதுமையை விரைந்து வரச் செய்துவிடுகின்றன.

ஒவ்வோர் அவயவத்திலும் முதுமையினால் உண் டாகும் மாறுபாடுகளைக் கவனிப்போம். இருதயமும் ரத்தக் குழாய்களும் ரத்தமும் வாலிப நிலை மாறின பின்பு அநேக மாறுதல்களை அடைகின்றன. இருதய வேகம் முதுமையினால் சற்றே அதிகரிக்கத் தொடங்கு கிறது. இளமையைவிட உடல் கனமாகவும் கொழுப்பு நிறைந்தும் இருக்கிறது. வாலிபத்தில் உழைத்தபடியே உழைப்பதற்கு, உடல் இடங்கொடுக்கிறதில்லை. இப் படியே ரத்தக் குழாய்களும் அவற்றின் மயிர்போன்ற கிளைகளும் மாறுதல் அடைகின்றன. அவை திமிர்த்து விடுகின்றன. மயிரிழை போன்ற கிளைகள் பல அடை பட்டுப் போகின்றன. ரத்தக் குழாய்களின் அமைப்பு மாறிவிடுகிறது. மூளைச் சோற்றில் பரவியிருக்கும் ரத்தக் குழாய்களுக்கு ஆகாரக் குறைவு ஏற்படுகிறது. அவை பலவீனமடைந்து உடைந்து போகும் நிலைமைக்கு வரு கின்றன. ரத்தம் மூளைச் சோற்றில் பெருகி மூளை, நரம்பு களைக் கெடுத்துவிடலாம். ரத்தத்திலும் பல மாறுபாடு கள் ஏற்படும். நோயின்மைக்குக் காரணமாக இருந்த சாதனங்கள், வாலிபத்திலும் யௌவனத்திலும் அதிக மாக இருக்கும். முதுமையில் இவை குறைந்து போகும். உணவுச் சத்துக்களும் ரத்தத்தில் குறைவுபடும். வாலி பத்தில் ரத்தம் ஜீர்ணக் கருவிகளில் பொழிந்த விதமாக முதுமையில் பொழிவதில்லை. இவைகளில் அமைந் திருக்கும் ஜீவாணுக்களின் போஷிப்புக் குறைவதனால், மெத்தென்ற தன்மை குறைந்து போகிறது. ஜீர்ண சாரங்கள் சுரப்பதும் குறைகிறது. ஈரல்களிலும் மாறு தல்கள் ஏற்படுகின்றன. குடலிலும் பலக் குறைவு ஏற்படுகிறது. வாயு உபத்திரவங்கள் அதிகமாகின்றன.

பிரவர்த்திக் கோளாறுகள் ஏற்படுகின்றன. இப்படியே பல அவயவங்கள் பலவாறாக க்ஷீணதசை அடைவதைக் காணலாம்.

சிறுநீர் வழியாக உடலுக்குத் தோஷமான பல சாதனங்கள் நாள்தோறும் வெளிப்பட்டுக்கொண்டே இருக்கின்றன. அவயவங்கள் தத்தமக்குரிய உழைப்புக் களை நடத்தும்பொழுது சில விஷத் தன்மையான சாதனங்கள் உண்டாகின்றன. இவை ரத்தத்தோடு கலந்து, பிருக்கங்கள் வழியாகச் செல்லுகையில் ரத்தத்தி லிருந்து பிரிக்கப்படுகின்றன. முதுமை வரும்பொழுது ரத்தத்திலிருந்து விஷத் தன்மையான சாதனங்களைப் பிரிக்கும் சக்தி பிருக்கங்களில் குறைவுபடுகிறது. அப் பொழுது தோஷ சாதனங்கள் விரைவாகப் பிரிக்கப் படாமல் ரத்தத்தில் கலந்து அதிகரிக்கின்றன. இருதயக் கோளாறுகளுக்கும் பிருக்கங்களின் கோளாறுகளுக்கும் இதுவே காரணமாகிறது. இருதயம் ரத்த வேகத்தை அதிகப்படுத்திப் பிருக்கங்களுக்குள் செலுத்துகிறது.

உடற்கட்டுக்கு ஆதாரமான நம் எலும்புகள் முதுமையினால் மாறுபாடு அடைகின்றன. ஆகையால், அஸ்திகள் எளிதில் ஒடியும் நிலையை அடைகின்றன. நமது சர்மமும் பலக்குறைவை அடைகிறது. சர்மத்தில் ஈரப் பசையும் எண்ணெய்ப் பசையும் குறைகின்றன. தைராயிடு, அட்ரினல், பிச்சூட்டரி முதலிய கிரந்திகளி லிருந்தும் சினைப்பை, பீஜங்கள் முதலிய அவயவங்களி லிருந்தும் சுரக்கின்ற அகச் சுரப்புச் சாரங்கள் ரத்தத் தோடு கலந்து, உடல் வளர்ச்சியில் பலவிதமான மாறு பாடுகளை உண்டுபண்ணக் கூடிய சக்தி பெற்றவை. தைராயிடு கிரந்திக்கு ஊனம் நேரிட்டால் வளர்ச்சிக் குறைவு வரும்; மந்த புத்தியும் ஏற்படும்; மற்றும் சில மாறுபாடுகளும் உண்டாகும். அட்ரினல் கிரந்திகள் ரத்தக் குழாய்களுக்கு வலிமை அளிப்பவை. இந்தக் கிரந்திகளுக்கு வலிமை குறையும்பொழுது ரத்த ஓட்ட

மும் குறைவுபடும். சில கர்மவியாதிகள் தோன்றும். சில இடங்களில் கரு நிறம் தோன்றிப் பரவும். உடம் பிற்கே பொதுவாக ஓர் அசதியும் தோன்றும். பிச் சூட்டரி கிரந்தியிலிருந்தும் பலவிதமான அகச் சுரப்புச் சாரங்கள் ஊறிவந்து ரத்தத்தோடு கலக்கின்றன. ஒரு வகையான சாரம் உடலின் உருவத்தையே மாற்றிவிடும் தன்மை உடையது. மற்றொன்று சினைப்பையின் குணங் களை மாற்றிவிடும் இயல்புடையது. மற்றொரு வகை யான சாரம் ரத்த வேகத்தை அதிகப்படுத்தும் தன்மை உடையது. இப்படிப் பல விதமாக உடலைப் பாதுகாக் கும் சாரங்கள் சுரக்கின்ற மிகவும் பிரதானமான கிரந்தி பிச்சூட்டரி. முதுமையில் இதற்கும் தளர்ச்சி ஏற்படு கிறது.

மனிதன் முதுமை அடைவதற்குக் காரணம் இந்தக் கிரந்திகளின் மாறுபாடுகளாக இருக்கலாமோ என்ற பிரச்னை எழுந்தது. இந்த விஷயமாக ஆராய்ச்சி கள் நடத்தியபொழுது, கிரந்திகளின் மாறுபாடுகள் தான் காரணம் என்று தெளிவாகவில்லை. எனினும், பீஜங்களிலிருந்து சுரந்துவரும் ஒரு வகையான சாரம் தேக வலிமையை அதிகரிக்கச் செய்யும் சக்தி பெற் றது என்று சிலர் சொல்லுகிறார்கள். பீஜத்திலி ருந்து வரும் **'வாஸ'** என்பதைத் தடுத்து விந்து வெளிப்படாமல் செய்தால், தேக வலிமை அதிகரிக்க லாம் என்றும், முதுமையைத் தடுக்கலாம், என்றும் கருதுகின்ற கொள்கை ஒன்று இன்றைக்கும் உண்டு. பீஜத்தின் அகச்சுரப்புச் சாரத்தை அதிகரிப்பதற்காக உயர்ந்த இனத்தைச் சார்ந்த குரங்கின் பீஜத்தை, முதுமை அடைந்தவனுடைய உடலில் ஒட்டவைத்து, முதுமையைத் தடுக்கலாம் என்று கருதிப் பரீக்ஷைகள் நடத்திப் பார்த்திருக்கிறார்கள். சிலர் இப்படியெல்லாம் செய்து பார்த்தபோதிலும் முதுமை யைத் தடுத்துவிட்டதாக இன்றளவும் தெரியவில்லை.

'எப்படிப் பார்த்தாலும் மனிதன் முதுமை அடைவது திண்ணம், இயற்கை விதியை வெல்ல யாரால் முடியும்!' என்றெல்லாம் சொல்லிக்கொண்டு நீடித்த நாட்கள் சுக தேகியாக வாழ்வதற்கான உபாயங்களை நாடித் தேடிப் பயன்படுத்திக்கொள்ளாமல் இருப்பதை எவரும் விவேகமாகக் கருதமாட்டார்கள். முதுமையின் லக்ஷணங்களை அறிந்துகொண்டு, அந்த லக்ஷணங்கள் விரைவில் தோன்றமல் எவ்வளவு காலத்திற்கு விலக்கி வைக்க முடியுமோ அவ்வளவு காலம் குறைவற்ற செல்வமாகிய நோயற்ற வாழ்வும் நீடித்த ஆயுளும் பெற்று, நமக்குப் பின் வாழப் போகிற சந்ததிகளுக்குப் பிரயோஜனமாக வாழ்வதல்லவா பிறப்பின் உத்தேசம்?

௭

# முதுமை

**கா**ல சக்கரம் சுழலுகிறது. மனிதனுக்கு வயதாகிறது. மூப்பின் லக்ஷணங்கள் வெளிப்படுகின்றன. ஆனால், மனிதன் இதைக் கொஞ்சத்திலே ஒப்புக்கொள்ளமாட்டான். ஒரு நாள் ஒருவர் என்னிடம் வந்து பேசிக்கொண்டிருக்கையில், "டாக்டர், நான் உட்கார்ந்து எழுந்திருக்கும்பொழுது முழங்கால் வலிக்கிறது" என்றார். "ஐயா! உங்களுக்கு வயதென்ன?" என்று கேட்டேன். "என் ஐயா! அப்படிக் கேட்கிறீர்களே? எனக்கு என்ன அப்படி வயதாகிவிட்டதா?" என்று சிறிது கோபத்தோடு சொன்னார். அவருக்கு வயது நாற்பதுக்கு மேல் ஆயிற்று. இரண்டு முழங்கால்களையும் மடக்கி நீட்டும்பொழுது பழைய கட்டைவண்டிபோல் கடக் என்ற சத்தம் கேட்கிறது. இது மூப்பின் ஆரம்பம் என்று சொன்னேன். இருந்தபோதிலும் அவரால் இதை ஒப்புக்கொள்ள முடியவில்லை. முதுமை வந்தது என்று ஒப்புக்கொள்ள யார்தாம் விரும்வார்கள்?

யயாதி மகாராஜா தமக்கு வந்த மூப்பைத் தம் மகன் பூருவுக்குக் கொடுத்துவிட்டு அவனுடைய யௌவனத்தைத் தாம் ஏற்றுக்கொண்டார். இக்காலத்தில் வாரனுப், ஸ்டெயினுக் இவர்கள் ஏற்படுத்தியுள்ள ஆபரேஷனால் யௌவனத்தை வரவழைத்துக் கொள்ளலாம் என்ற எண்ணம் சிலருக்கு உண்டு. முதுமைக்கு இயல்பான லக்ஷணங்களை மற்றவர்கள் பாராதிருக்கும்பொருட்டு அழகிய உடைகள் உடுக்கிறார்கள். அந்த லக்ஷணங்களைக் குறைக்கப் பலவித மான மருந்துகள் சாப்பிடுகிறார்கள். போஷிப்பான

உணவுகளை உட்கொள்ளுகிறார்கள். தலையில் நரையை மறைக்கக் கரு நிறம் பூசிக்கொள்கிறார்கள்.

ஓர் அரசன் தனக்கு மரணம் வராமலே இருக்கவும் வெகு நாட்கள் வலிமையுடன் வாழவும் எண்ணினான். அதற்காக அமிர்த சஞ்சீவியை வரவழைத்தான். அமிர்த சஞ்சீவி வந்ததும் அதைச் சாப்பிட வேண்டுமா வேண்டாமா என்ற சந்தேகம் எழுந்தது. மந்திரிகளிடம் யோசனை கேட்டான். அவர்கள் சொன்னது சரியில்லை என்று நினைத்துக் காட்டில் வசித்துவந்த ஒரு மகரிஷியிடம் சென்று யோசனை கேட்டான். முனிவர், "மன்னா! இந்தச் சஞ்சீவியின் குணம் என்ன?" என்றார். "இதை உண்டவன் மரணம் அடைவதில்லை" என்று அரசன் பதில் சொன்னான். அப்பொழுது முனிவர், "அரசனே! நீ அமிர்த சஞ்சீவியைப் புசித்து வெகு காலம் பிழைத்திருக்கும்போது, உன் உறவினர்களும் சிநேகிதர்களும் இறந்து போய்விடுவார்களே. உனக்கு அன்பானவர்கள் இறந்த பிறகு, நீ மட்டும் இருந்து என்ன பயன்? மற்றவர்கள் தங்களுக்கும் உனக்கும் உள்ள வயதின் வித்தியாசத்தை எண்ணி உன்னைக் கவனிக்கமாட்டார்களே. இப்படி வாழ்வதில் என்ன நன்மை?" என்றார். அரசன் அமிர்த சஞ்சீவியை உட்கொள்ளக் குறித்திருந்த நாளைப் பெரிய திருவிழாவாகக் கொண்டாடச் சகல ஏற்பாடுகளும் செய்திருந்தான். அரசன் காட்டிலிருந்து திரும்பி வந்தவுடனே அந்த ஏற்பாடுகளையெல்லாம் நிறுத்தி விடக் கட்டளையிட்டான். அமிர்த சஞ்சீவியைச் சாப்பிடுவதில்லை என்றும் தீர்மானித்தான்.

இந்த உலகத்திலே வாலிபர்கள் வயோதிகர்களை அலக்ஷ்யம் செய்வார்கள். உடலில் சக்தி குறைந்த முதியவர்கள் வாலிபர்களைப்போல் வேலை செய்ய முடியாது. இந்திரியங்களும் ஒவ்வொன்றாகச் சோர்ந்து விடும்; திருஷ்டி குன்றும்; புதியவைகளை ஒப்புக்

கொள்ள மனம் இசையாது, தங்களுக்குத் தெரிந்ததே மேலான ஞானம், அதைவிடச் சிறந்தது மற்றொன்றும் இல்லை என்ற எண்ணமும் உண்டாகும்.

கல்வி கற்றுக்கொள்ளும் சக்தி வாலிபத்தில் தீவிரமாக இருந்து, பின்பு குறைந்துகொண்டே போகும். வயது மிகுந்தால் கற்கும் ஆற்றல் முற்றும் மறைந்துவிடும் என்று சொல்வதை இக்காலத்தில் யாவரும் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். ஏராளமாகப் புத்தகசாலைகள் ஏற்பட்டிருப்பதால் விஷயங்களை அதிகமாக ஞாபகத்தில் வைத்துக்கொள்வது அவசியமில்லை. கல்விப் பயிற்சியில் மேன்மை அடைவதற்கு வேண்டிய நூதன வசதிகள் ஏற்பட்டிருக்கின்றன. ஆகையால் இக்காலத்தில் வயதில் முதியவரும் புதிய விஷயங்களை அறிய முடிகிறது.

இந்த இரண்டாவது உலக மகா யுத்த காலத்தில் ஒரு விஷயம் அதிகமாகத் தெளிவாயிற்று. யுத்தத்திற்காகச் சேகரிக்கும் சாமக்கிரிகளைப் போர்வீரர்கள் சிக்கனமாகச் செலவு செய்வார்களென்று நாம் நினைக்க முடியாது. அவர்களுடைய அவசரம், பொருள்களைச் சிக்கனமாகச் செலவு செய்ய விடாது. நாட்டில் உள்ளவர்கள் தாம் சிக்கனமாக இருக்கவேண்டும். சாதாரண நாட்களில் குப்பை என்று எறியக்கூடிய பொருள்களை யுத்த காலத்தில், நாம் பயன்படுத்துகிறோம். வயோதிகர்களை யுத்தத்திற்கு முன்பு புறக்கணித்தவர்கள், இந்த யத்த காலத்தில் வாலிபர்களுடைய உத்தியோகத்தைச் செய்வதற்கும் வேறு பல வேலைகளுக்கும் அவர்கள் பயன்படுவார்கள் என்று கருதலானார்கள். யுத்த விஷயமான பல வேலைகளில் ஐம்பது வயதுக்கு மேற்பட்டவர் அநேகர் ஊக்கத்தோடு உழைக்கிறார்கள்.

இந்த யுத்தத்தை ஒழுங்காக நடத்திய சர்ச்சில், ரூஸ்வெல்ட் முதலியவர்களுடைய வயது அறுபதுக்கு மேற்பட்டதல்லவா? மகாத்மா காந்திக்கு வயது எழுபத்

தைந்து ஆகவில்லையா? அவர் உடல் எவ்வளவு வலிமை குறைந்ததாக இருந்தபோதிலும் அவருடைய அறிவும் அநுபவ ஞானமும் அல்லவா அவரை இந்தியப் பொது மக்களுக்குத் தலைமை வகிக்கச் செய்தது? பர்னர்ட் ஷாவுக்கு 88 வயது ஆனபோதும், அவருடைய புத்தி நுட்பம் சற்றேனும் குறைபட்டதாகத் தோன்றவில்லை. யுத்த காலத்தில் பலவிதக் கஷ்டமான பிரச்னைகள் எழுகின்றன. அவற்றையெல்லாம் தெளிவாக்கி அமலுக்குக் கொண்டுவருவதற்கேற்ற சரியான உபதேசம் வயோதிகர்களிடம் இருந்துதான் கிடைக்கிறது.

இந்தியாவில் பல சிற்றரசு நாடுகளில் மந்திரி உத்தியோகம் வகித்து, அரசாங்கத்தை நடத்துகிறவர்கள் அநேகமாய் ஐம்பது அல்லது அறுபது வயதுக்கு மேற்பட்டவர்களே. இளைஞர்கள் இவர்களைப்போல் ராஜ்ய தந்திரம் அறிந்தவர்களாக இருப்பார்களா என்பது சந்தேகந்தான். வயோதிகர்களுடைய அநுபவ ஞானத்தைப் படங்கள் நிறைந்த ஒரு புத்தகசாலையாக எண்ணலாம். வயோதிகர், தாம் வசித்து வரும் சமூகத்திற்குத் தகுந்தபடி அநுபவ ஞானத்தை மூளையில் சேகரித்து வைத்திருப்பார்கள். அந்தச் சமூக வாழ்வு விருத்தியடைவதற்காக வாலிபர்கள் அந்த அநுபவ ஞானத்தைப் பயன்படுத்திக்கொள்ளலாம்.

முதுமை அடைந்தவர்களுக்கு மனம் சஞ்சலம் இல்லாத நிலையில் இருப்பதால் புத்தி, ஊக்கத்துடன் உழைக்கும். சந்தோஷம், துக்கம், பயம் முதலியவை புத்தியின் உழைப்பைக் கெடுப்பதில்லை. மூளை வேலை செய்வதற்கு உடல் வலிமை அதிகமாக வேண்டியதில்லை என்பது தெரிந்த விஷயமே.

ஆதி நாளில் வயோதிகர்களுடைய நிலை சிறந்திருந்தது. வயோதிகர் சமூக அமைப்பிற்குப் பெரிதும் உதவியாக இருந்தார்கள். சமூகம் அவர்களை நிராகரிக்க

வில்லை. இளைஞரிடமிருந்து மரியாதை பெற்றார்கள். வயோதிகர்களும் அவர்களுடைய வாழ்நாட்களை வீணாக்கவில்லை. உடல் வலிமை குறைந்ததும், 'இனிச் சிற்றின்ப அநுபவங்கள் நமக்கு உசிதம் இல்லை என்று தீர்மானித்து, இந்திரியங்களை அடக்கி ஆண்டார்கள். தத்துவ ஞானத்தை அறிந்துகொள்ள இறங்கினார்கள். தங்களுடைய வாழ்வின் அநுபவ ஞானங்களைச் சிறுவர்களுக்குச் சொல்வதிலே காலங் கழித்தார்கள். புராணக் கதைகளையெல்லாம் இயற்றியவர் சிறுவர்கள் அல்லர். ராமாயணம், இயற்றிய வான்மீகியும் மகாபாரதம் இயற்றிய வியாசரும் வயது முதிர்ந்தவர்களே; சகல அநுபவ சித்தியும் அடைந்தவர்கள் இவர்கள். நமது குடும்பங்களில் ஆதி நாட்களில் குழந்தைகளுக்குக் கதைகள் சொல்லுபவர்கள் குடும்பத்தில் மூப்படைந்த வயோதிகர்களே. ராமாயணம், பாரதம், பாகவதம் இவற்றையெல்லாம் இனிமையாக எடுத்துரைக்க உலகாநுபவம் பெற்ற பெரியோர்களால்தான் முடியும்.

முன் காலத்தில் நமது நாட்டில் வயோதிகர்களுக்கு இளைஞர்கள் மரியாதை காட்டி வந்தார்கள். குடும்பமும் சமூகமும் ஒத்து வாழ்ந்தன. பெரியோர்கள் தலைமை வகித்ததனால் ஒரு விதமான கேடும் நமது நாட்டில் வந்ததாகத் தெரியவில்லை. தத்தமக்குரிய கொள்கை மேம்பாடு உடையவர்கள் ஐரோப்பியர்கள். அவர்களுடைய கொள்கை மேம்பாடு நமக்குள் பரவின போது நாமும் சுய காரியப் புலிகள் ஆகிவிட்டோம். குடும்ப ஒத்துழைப்பும் குறைந்துவிட்டது. மூத்தோர் சொல் வார்த்தை 'அமிர்தம்' என்பது இன்று 'விஷம்' என்று ஆகிவிட்டது. ஆங்கிலத்தில் கூடத் தர்மம் வீட்டிலிருந்து ஆரம்பிக்கவேண்டும் என்று கூறியிருக்கிறது. அப்போது குடும்ப வாழ்விலேதான் நமது நோக்கத்தை முதலில் செலுத்த வேண்டும் என்பது தெளிவாகவில்லையா? பின்புதான் சமூக வாழ்வைக்

கவனிக்க வேண்டும். அதற்குப் பிறகு தேசாபிமானம், உலகாபிமானம் என்ற முறைப்படி இது வளர வேண்டும். அபூர்வமாக ஏதோ சில சந்தர்ப்பங்களிலே தான் தேசாபிமானத்திற்காகக் குடும்பத்தையும் சமூகத்தையும் கைவிடலாம். அப்போதுகூடக் குடும்பத்துக்கு மிகவும் அவசியமான விஷயங்களைக் கவனிக்க ஏற்பாடுகள் செய்த பிறகு விலகுபவர்களே தேசாபிமானிகள் ஆவார்கள்.

நமது சமூக வாழ்வு மாறுபாடு அடைந்து கொண்டே இருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. எப்படிப்பட்ட மாறுதல் அடைந்தாலும் குடும்ப ஒற்றுமை குலைய வெகு நாட்கள் ஆகும் என்றுதான் நினைக்கவேண்டும். ஆகவே ஒரு குடும்பத்தார் அதிலுள்ள வயோதிகர்களை மதிக்க வேண்டியது அவசியம். வயோதிகர்களால் உலகத்திற்குப் பயனில்லை என்றால் யௌவனம் கடந்த உடனே மரணம் ஏற்படும்படி கடவுள் செய்திருக்க வேண்டும் அல்லவா? ஆனால் அவர் அப்படிச் செய்யவில்லையே. ஆகையால் உலகத்தின் முற்போக்கு இயக்கங்களில் முதியவர்களுக்கும் ஒரு முக்கிய ஸ்தானம் உண்டு என்பதே அவருடைய சித்தம் என்பது விளங்கவில்லையா?

நம்முடைய குழந்தைகளுக்கு வியாதி வந்தால் அவர்களைக் காப்பாற்ற எவ்வளவு கவலைப்படுகிறோம்? எவ்வளவு சிரத்தையாகக் கவனிக்கிறோம்? எப்படி யெல்லாம் அவர்களை ஆற்றித் தேற்றி அரவணைக்கிறோம்? ஆதரிக்கிறோம்? அப்படியே நம்முடைய மக்கள் வாலிப தசையிலே கஷ்டப்பட நேர்ந்தால் அவற்றை நிவர்த்தி செய்ய எத்தனையோ வகைகளில் முயல்கிறோம். நம்முடைய வீட்டிலே ஒரு குழந்தை முடமாகவோ குருடாகவே செவிடாகவோ இருக்கத் தலைப்பட்டால், அந்தக் குழந்தை ஜன சமூகத்தின் ஓர் அங்கமாகத் தன்னளவிலே தன்னால் இயன்ற வரைக்கும் பொது

கலத்திற்காக உதவி செய்து வாழ வேண்டும் என்ற உத்தேசத்தோடு, அந்தக் குழந்தைக்கு ஏற்பட்டிருக்கும் குறைகளை நிவர்த்தி செய்ய எத்தனையோ வழி வகைகளைக் கையாளுகிறோம் அல்லவா?

அப்படியானல், 'சமூகத்திலே அநாதைகளாக இருக்கும் முடம், குருடு, செவிடுகளைப்பற்றிய பொறுப்பு நமக்கு இல்லை' என்று சொல்ல முடியுமா? அதைப்போலவே ஏழைகளின் பொறுப்பும் நம்முடையதுதான். ஏழையாக இருப்பவனுக்கு உலகில் வாழும் உரிமை இல்லை என்று சொல்ல முடியுமா? வறுமையையும் எளிமையையும் ஒழிப்பதற்கு முயலாத ஒரு ஜன சமூகச் சீர்திருத்தங்களை ஒப்புக்கொள்ள முடியுமா? இங்கிலாந்து முதலிய மேலை நாடுகளில் பாடு பட்டுப் பிழைக்கத் திராணியில்லாத முதியவர்களுக்கு அரசாங்கமே பண உதவி செய்கிறது. அவர்களுடைய எஞ்சிய வாழ்நாட்கள் கஷ்டமில்லாமல் அமரிக்கையாகச் செல்லப் பல வழிகள் செய்து கொடுக்கிறார்கள். முதுமை, மனிதனுக்கு முடிவிலே ஏற்படும் இயற்கை நிலைமை என்று உணர்ந்து, அந்த நிலையில் கஷ்டங்கள் இல்லாமல் வாழவும், ஜன சமூகத்திற்கு அவர்களால் ஏற்படக் கூடிய எல்லா நன்மைகளும் கிடைக்கவும், அவர்கள் தங்கள் சுய மரியாதையை இழக்காமல் இருக்கவும் ஒழுங்கு செய்வது மிகவும் அவசியம். இது ஜன சமூகத்தின் கடமை; அரசாங்கத்தின் கடமை. பயன் படாத ஆடு, மாடு, குதிரை இவைகளை விஷம் வைத்துக் கொல்லுவதுபோல முதியவர்களையும் கொன்றுவிட முடியுமா?

இந்த மகா யுத்தத்திலே வெற்றியடைந்தோம். இப்போது உலகம் முழுவதிலும் சமாதானமும் சந்தோஷமும் நிறைய வேண்டும்; ஒரு புது யுகம் ஏற்பட வேண்டும் என்ற நோக்கத்தோடு யுத்தத்திற்குப் பின் நிறைவேற்ற வேண்டிய பல திட்டங்களை வகுப்பதிலே நம்முடைய கவனத்தைச் செலுத்திக்கொண் டிருக்கி

றோமே. குறைவற்ற செல்வமான நோயற்ற வாழ்வைப் பெறும்பொருட்டுத் தொத்து நோய்களைத் தடுக்க வேண்டும், சுகாதார நிலையை உயர்த்த வேண்டும், சிசு மரணத்தைக் குறைக்க வேண்டும் என்று பல திட்டங்கள் போடுவதில் நமது முழு நோக்கத்தையும் செலுத்துகிறோமே? இந்தத் திட்டங்கள் எல்லாம் நிறைவேறி விட்டால் மனித வாழ்வு நீடித்துவிடுமே. இன்றைக்கு இந்தியர்களுடைய சராசரி ஆயுட்காலம் ஐம்பது வயது தான். இந்தத் திட்டங்கள் நிறைவேறிவிட்டால் அறுபது, எழுபது என்று பெருகிவிடுமே! இப்படி மனிதர்களுடைய வாழ்நாளை நீடிக்கச் செய்யும் திட்டங்களில் முனைந்து நிற்கிறவர்கள் முதியவர்களையும் சமூக வாழ்விற்குப் பயன்படுத்திக்கொள்ளக் கூடிய ஒரு திட்டம் போட வேண்டாமா?

புருஷர்களுடைய வாழ்நாளைவிட ஸ்திரீகளுடைய வாழ்நாள் நீடிக்கிறது. இது இயற்கையின் சிக்கன நியதிகளிலே ஒன்று. ஸ்திரீகள் தம் பிள்ளைகளை உதரத்திலே சுமக்கிற காலத்திலும், பெற்ற பின் அவர்களை வளர்க்கும் காலத்திலும் தம்முடைய எலும்புகளையுங் கூட உருக்கி ஊற்றிவிடுகிறார்கள். இப்படிக் காக்கும் தருமம் இயற்கையாகவே அவர்களுக்குள் அமைந்திருக்கிறது. இந்தத் தருமத்தைச் சரிவரச் செய்வதற்காகவே ஸ்திரீகளுடைய வயது, நீடித்திருக்க இயற்கை இடம் கொடுக்கிறது. பல பிரசவங்களில் தப்பிப் பிழைக்கும் ஸ்திரீகள், பிள்ளை பெறும் பருவம் கடந்த பிறகு யமதூதர்களையும் ஏய்த்துவிடுவார்கள். பேரன், பேத்தி, கொள்ளுப் பேரன், கொள்ளுப் பேத்தி முதலியவர்களையெல்லாம் பார்த்த பிறகுதான் மூப்படைந்த ஸ்திரீக்கு மரணம் ஏற்படும். அத்தனை வருஷங்கள் உயிரோடு வாழும் ஸ்திரீகளுக்குக் குடும்ப விஷயங்களிலும், உலக வியாபாரங்களிலும் அதிகப் பயிற்சி ஏற்பட்டுவிடுகிறது. குடும்பத்தையும் உலக விவகாரங்களையும் வெகு திறமை

யாகவும் தந்திரமாகவும் நடத்தக்கூடிய அநுபவம் ஏற்பட்டுவிடுகிறது. இந்த உண்மையை வெளிப்படையாகச் சொல்லாமல் குறிப்பாக உணர்த்திக் காட்டுகிற நாட்டுக் கதைகள் எத்தனை? அம்மையார்ப் பாட்டியின் உதவியால் தாம் விரும்பும் பெண்களை எத்தனை வாலிபர்கள் அடைந்துவிடுகிறார்கள்! ஆங்கிலக் கதைகளிலே சிண்டர்லா என்னும் கதையில் ராஜகுமாரனை மணக்க அந்த ஏழைப் பெண்ணுக்கு உதவி செய்த தேவதையும் கிழப்பாட்டியாகத் தோன்றினாள். முதுமை அடைந்த பாட்டிமார்கள், சிறுமிகளைவிட வெகு திறமையாக வேலை செய்யும் ஆற்றல் உடையவர்கள். புருஷர்கள் மூப்படையும்போது ஒரு குடும்பத்துக்குப் பாரமாகக் காணப்படலாம். ஆனால், மூப்படைந்த பாட்டிமார்களோ குடும்பத்துக்குத் தோன்றாத் துணையாக இருப்பார்கள்; பல வகையில் பயன்படுவார்கள்.

முதுமைப் பருவம் இன்பமாக அமையவேண்டுமானால் இளமையிலிருந்தே அதற்கு ஆயத்தம் செய்ய வேண்டும். இளமையிலே காக்கப்படும் தேக செளக்கியத்திற்கு ஏற்றபடி முதுமைப் பருவத்தில் உடல் நிலைமை அமையும்; அப்படியே மனப்பான்மையும். அகன்ற கல்வியால், தெளிந்த ஞானத்தால், ஆழ்ந்த சிந்தனையால், மனத்தைப் பழக்கி ஆளப் பயின்ற வாலிபர்கள் முதுமை அடையும்போது அவர்களுடைய மனமும், சரீர சக்திக் குறைவைச் சரிக்கட்டும் மனோ சக்தியாக அமைந்துவிடும்.

மூப்பு அடையுமட்டும் உடலுக்குப் போஷிப்பான உணவுப் பொருள்கள் சுகத்திற்கு உகந்தபடி தேவைக்கு ஏற்ற அளவிலே கிடைக்கவேண்டும். மூப்படைந்த பின்பு, உடலின் நிறையின்படி உணவை அளவு அறிந்து உண்ண வேண்டும். அளவுக்கு மிஞ்சி உட்கொண்டால் குடலுக்கு அதிக வேலை ஏற்படும். ஒரு வேளை அது ஒத்துழையாமை இயக்கத்துக்கு ஆயத்தம்

செய்துவிடலாம். ரத்தக் குழாய்களுக்கும் சிரமம் ஏற்படும். முதுமை ஏற்படுமட்டும் உடலின் வளர்ச்சிக்கு உதவிய அணுக்கள் முதுமை அடைந்த பிறகு அபிவிருத்தி யாவதில்லை. முதுமை வரும்போது அணுக்களும் முதுமை அடைகின்றன. முதுமை அடையும் அணுக்களை அதிகமாக உழைக்க வைத்தால் அவைகளும் ஒத்துழையாமை இயக்கத்தில் கலந்து நம்மைக் கைவிட்டுவிடும். கரைக்கு மிஞ்சி வெள்ளம் வந்தால் ஏரி நீர் உடைப்பெடுத்து நீரை யெல்லாம் முற்றும் வடித்துவிடுவதுபோல அவயவங்கள் சீர்கெடலாம்; இருதயம் தாறுமாருக ஓடலாம்; குடல் வலிமை குன்றலாம்; பல நோய்களுக்கு ஆளாகலாம்; சிறு நீர்ப் பைகளுக்குக் கேடு வரலாம்; மலக்குடல் வலுவற்றுப் போகலாம்; மூளையில் ரத்தக் குழாய் உடையலாம்; உயிர் நிலைகள் நிலை குலையலாம்; முடிவிலே உடல் உயிரை வெளியேற்றிவிடும். உடலுக்கு ஏற்படும் இந்தத் தோஷங்களெல்லாம் இயற்கை நியதிப்படி மெதுவாகவே ஏற்படும். மித மிஞ்சிய போஜனத்தால் இந்தத் தோஷங்களைத் துரிதப்படுத்தி வரவழைத்துக்கொள்ளலாம்.

நாம் வாழும் இடங்கள், ஊர்கள், தேசங்களின் சூழ்நிலைகள் காலாவஸ்தைகள் இவை, சரீர ஆரோக்கியத்திற்கு அநுகூலமாக உத்தம முறையிலே எப்பொழுதும் அமைவதில்லை. சரீர ஆரோக்கியத்திற்குப் பிரதிகூலமான தேசாவஸ்தைகளும் காலாவஸ்தைகளும் சூழ்நிலைகளும் நமது உடல் வலிமையைக் குறைத்துவிடுகின்றன. அப்படியே நாம் செய்துவரும் தொழில்களும் சரீர ஆரோக்கியத்திற்குப் பிரதிகூலமாக அமையலாம். இந்தப் பிரதிகூலமான நிலைமைகளைப் பரிகரிக்கும் உபாயங்களை நாடவேண்டும்; கால தாமதமின்றித் தேடவேண்டும்; குறித்த வேளைகளில் ஆரோக்கிய முறைகளிலே பக்குவம் செய்த உணவை மிதமாக உண்பதும்,

லாகிரி வஸ்துக்களுக்கு உடலை அடிமைப்படுத்தாமல் இருப்பதும், தேவையான அளவு சரீரப் பயிற்சி செய்வதும், மன நிலையைக் காப்பதும், பிள்ளைப் பருவம் முதல் முதுமைப் பருவம் வரையில் இன்றியமையாதவை. பிறப்பிலேயே தீர்க்காயுசு வரம் பெற்றுப் பிறந்திருந்தாலும் அந்த நீடித்த ஆயுளை அநுபவிக்கப் பயிற்சி வேண்டும்.

முதுமை வரும் வரைக்கும் செய்துவந்த தொழிலை முதுமையிலே, விட்டு விலக நேரிடுகிறது. சொந்தத் தொழிலாக இருந்தால் அதைப் பிள்ளைகளிடம் ஒப்படைக்க வேண்டிவரும். பராதீனத் தொழிலாக இருந்தால் அதிகாரிகள் நம்மிடமிருந்து அதைப் பறித்து, வாலிபர்களுக்குக் கொடுத்துவிடுவார்கள். சொந்தத் தொழிலிலே இருந்து எவ்விதமான மனக் கவலையும் ஏற்படாமலே விலகிக்கொள்ளத் தயாராக இருந்துவிடுவோம். பராதீனத் தொழிலிலிருந்து விலக நேரிடும் பொழுது எப்படிச் செலவு நடக்கும், எப்படிப் பொழுதைப் போக்குவோம், எப்படிக் காலம் தள்ளலாம் என்றெல்லாம் கவலைப்படுவோம். வந்தபின் காப்போனைப்போல இராமல் வருமுன் காப்போனாக வாழ்கிறவன் இப்படிக் கவலைப்பட ஒருபோதும் நேரிடாது. வருமுன் காப்போனுக்கு உதவியாக இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிகள் ஏற்பட்டிருக்கின்றன. வேலையிலிருந்து நீங்கினதும் எஞ்சிய வாழ்நாளின் செலவுக்குத் தேவையான பணம் கிடைக்கத் தகுந்த ஏற்பாடுகளை இந்தக் கம்பெனிக்காரர்கள் செய்திருக்கிறார்கள். முதுமையிலே மனிதர்கள் வருந்தாமல் இருப்பதற்காக, அதற்கு முந்தியே இன்ஷ்யூரன்ஸ் முதலானவைகளைப் பிரயோஜனப் படுத்திக்கொள்ள வேண்டும்; மேல் நாடுகளில் இந்த விஷயத்தில அரசாங்கமே உதவி செய்கிறது.

முதுமை அடைவதற்கு முந்தியே குடும்பக் காரியங்களை ஒருவிதமாக ஒழுங்குபடுத்தி நமது உதவி

இல்லாமலே குடும்பத்தின் அங்கத்தினர்கள் வாழ ஏற்பாடுகள் செய்துவிட வேண்டும். விவாகம் என்பது ஆர அமர யோசித்து நிகழவேண்டிய ஒரு வாழ்க்கைச் சம்பவம். ஆய்ந்து ஓய்ந்து பார்த்து மணந்த மனைவியோடு இன்புறக் கலந்து, வருமானத்தின் அளவு அறிந்து, மக்களைப் பெறுபவன் முதுமையிலே வேலையிலிருந்து விலகினாலும் குடும்பத் தொல்லைகள் அதிகம் இல்லாமல் வாழ முடியும்.

முதுமைக்கு அருந்துணையாக இருப்பவள் கலைமகள். மதவிஷயமான ஆராய்ச்சி, தத்துவஞானம், உலகாநுபவ ஞானம், தேச சஞ்சாரம் என்று இப்படியே பல துறைகளில் வெளிவரும் பல நூல்களோடு அவரவர்களுடைய விருப்பத்துக்கு ஏற்றபடி பழகிப் பொழுது போக்குவது நலம். சிறு வயசில் பண்படைந்த எந்த வாலிபனும் சமூக முன்னேற்றத்திற்காக ஒன்றைச் செய்ய வேண்டும் என்று ஆர்வமுடையவனாக இருக்கலாம். ஆனால், செய்யும் தொழில்களினால், உத்தியோகங்களினால், குடும்பத் தொல்லைகளால் அந்த ஆர்வம் நிறைவேறாமல் போகலாம். இந்திரிய போகங்கள் நமது ஆர்வத்தைத் தடை செய்யலாம். ஆனால் ஆதியிலே கொண்ட ஆர்வத்தை வளர்க்கக்கூடிய பண்பைப் போற்றி வந்தால், மூப்படைந்த பிறகு சம்சார பந்தங்களிலிருந்து விலகிச் சமூகத் தொண்டர்களாக அமையலாம். இதற்கு முதுமை ஒருபோதும் தடை செய்யாது. இன்றைக்கு வாலிப உலகமெல்லாம் வணங்கும்படி சமூகத் தொண்டராய் விளங்குபவர்கள் முதியவர்கள் அல்லவா?

# 10

# மானிடவாழ்வுக்கு எல்லை உண்டா?

**வா**ழ்வுக்கு முடிவு இருக்கலாம். ஆனால், ஆயுள் நூறுதானா? அல்லது அதற்கும் மேல் நீண்ட காலம் வாழ முடியுமா என்று கேட்டால், திட்டமாகச் சொல்ல முடியாது. நூற்றிருபது வயசு இருந்தவர்களாகச் சிலரைக் குறிப்பிடலாம். இன்னும் அதிக வயசாகும் மட்டும் இருக்க முடியுமா என்று கேட்டால் அதுவும் முடியலாம் என்றுதான் சொல்ல வேண்டும். நூற்றிருபது வயசையே எல்லையாக வைத்துக்கொள்வோம். இந்த எல்லையை ஒவ்வொருவரும் ஏன் அடையக் கூடாது?

இந்த வயசு மட்டும் அல்ல. இறப்பற்ற வாழ்வு வேண்டும் என்ற விருப்பம் மனிதனுக்கு ஆதி நாளிலிருந்தே உண்டு. 'என்றும் பதினாறு வயசாகவே இரு' என்று அநுக்கிரகிப்பர் பெரியோர். அதாவது, மனிதன் இறப்பில்லாமலே வாழ்ந்தால் மட்டும் போதாது; என்றும் யௌவனத்தோடு வாழ வேண்டும் என்ற எண்ணமும் உண்டு. யௌவனத்துடன் வாழ்ந்தால் போதுமா? சகல பாக்கியங்களோடும் வாழ வேண்டாமா? இப்படிப்பட்ட வாழ்வைத் தேடுவன இரண்டு சாஸ்திரங்கள்: ஆயுர்வேதம், ரசாயன சாஸ்திரம் என்பன. ஆயுர்வேதம் அமிருத சஞ்சீவியைத் தேட முயன்றது. ரசாயன சாஸ்திரம் எதையும் தங்கமாக்க முயன்றது. ஆயுர்வேதம் தேடிய அமிருத சஞ்சீவியும், எதையும் பொன்னாக்கும் பரிசவேதியும் மனிதனுக்கு அகப்பட்டுவிட்டால் மனிதன் என்றென்றைக்கும் யௌவனத்தோடு பொன்னால் பெறக்கூடிய சகல பாக்கியங்களும் பெற்று யாதொரு குறைவும் இன்றி வாழ

லாம். ஆயுர்வேதம் அமிருத சஞ்சீவியைத் தேடிக் கண்டடையாவிட்டாலும், யமதூதர்களுடைய வரவை ஒத்திவைத்து வாழத் தகுந்த எத்தனையோ சாதனங் களைத் தேடிக் கொடுத்தது.

ஆலிவர் வெண்டல் ஹோம்ஸ் (Oliver Wendell Holmes) என்ற ஆங்கில ஆசிரியர் வைத்தியராக இருந்தபடியால் அவரை ஒருவர், "ஐயா டாக்டரே, ஆயுளை எப்படி நீட்டித்துக்கொள்வது?" என்று கேட் டார். அதற்கு ஹோம்ஸ், "பிறப்பதற்குக் கொஞ்ச வருஷங்களுக்கு முன்பாகவே, 'நீடித்த ஆயுளை உடைய தாய் தந்தையர் தேவை' என்று பத்திரிகைகளில் விளம் பரம் செய்ய வேண்டும். அதுதான் முதலில் செய்ய வேண்டியது" என்றார். நீடித்த வாழ் நாட்களை அடையத் தாய் தந்தையர்கள் நீடித்த ஆயுள் உள்ளவர்களாக இருக்க வேண்டும்.

நான் ஒரு நாள் ரெயில் பிரயாணம் செய்துகொண் டிருக்கையில், கூட இருந்தவர்களில் லெளகிக சந்நியாசி ஒருவர்: அவர் தலையிலே ஒரு நரைகூடக் காணவில்லை; உறுதியான முத்து வெண்பற்கள் அவர் சிரித்தபோ தெல்லாம் தோன்றின. பேச்சும் வெகு கம்பீரமாகவே இருந்தது. அவர் பேச்சுக்களில் தற் புகழ்ச்சியே அதிக மாகத் தொனித்தது. யாருமே அவரை ஐம்பதுக்கு மேல் மதிக்கமாட்டார்கள். முகத்தில் திரை ஒன்றேனும் காணவில்லை. நான் அவரோடு சம்பாஷித்துக்கொண் டிருக்கையில், அவர், பேச்சுக்கிடையே, "உங்களைப் பார்த்தால் டாக்டர்போல் இருக்கிறதே? என் வயசைத் தங்களால் மதிப்பிட முடியுமா?" என்று கேட்டார். அதற்கு நான், "சுமார் அறுபது இருக்கலாம்" என்றேன். அதைக் கேட்டதும் அவர், "ஹா! ஹா!" என்று சிரித்து, "எனக்கு வயசு எண்பது ஆயிற்று" என்றார். ஆறடி உயரம்; ஒடிசலான உருவம்; இறுகின தசைகள்; ஒரு பல்லேனும் அசையவில்லை. அவரை

எண்பது வயசு சென்றவராகவே மதிக்க முடியவில்லை. திகைத்துப் பார்த்துக்கொண் டிருந்த என்னிடம், அவர், "நான் அதிகாலையில் எழுந்துவிடுவேன். ஐந்து மைலுக்குக் குறையாமல் நடப்பேன். வேளை தோறும் கணக்கறிந்து சாப்பிடுவேன். இதுவரையில் எந்த விதமான மருந்தும் சாப்பிட்டு அறியேன். என் தம்பி ஒருவன் இலங்கையில் இருக்கிறான். அவனுக்கு இன்னும் ஐம்பத்தைந்து வயது ஆகவில்லை. அவனைப் பார்த்தால் என் தமையன் என்று தான் சொல்வீர்கள். இதற்கெல்லாம் என்ன காரணம் ஐயா? என் நற்பழக்கங்கள் அல்லவா? என் சிஷ்யன் இதோ இருக்கிறான். நன்றாய்ப் பாடுவான். இவனுக்கும் இந்த உபதேசத்தைத்தான் சொல்லுகிறேன். இவனுக்குக் கேட்க மனம் இல்லை......." என்றெல்லாம் தம் இயம நியமப் பிரபாவங்களை அடுக்கிக் கொண்டே வந்தார்.

முடிவிலே நான் அவரிடம் ஒரு கேள்வி கேட்டேன்: "ஆமாம், தங்கள் தகப்பனாரும் பாட்டனாரும் எத்தனை வயசு வரையில் இருந்தார்கள்?" என்று. அதற்கு அந்தச் சந்நியாசி, "தொண்ணூற்று நாலு வயசு வரையில் இருந்தார்கள்" என்றார். என்னிடம் பேசிய சந்நியாசிக்கு இருந்த திட சரீரமும் நீடித்த ஆயுளும் தலைமுறை தலைமுறையாக வந்தவை. ஆனால் சந்நியாசியாக இருந்தமையாலும், ஒழுங்காக இயம நியமக் கிரமங்கள் தவறாமல் வாழ்ந்தமையாலும் பாரம்பரியமாகப் பெற்றிருந்த குணத்தைக் காப்பாற்றிக்கொண்டார். அவருக்கு ஆயுசு தொண்ணூற்று நாலுக்கு மேல் சொல்லலாம். பாரம்பரியமாக நாம் பெறும் வாழ்நாட்களைச் சரியான முறையில் நடத்தவேண்டும். இந்த ஆயுசு எல்லையைத் தாண்டவேண்டும் என்று பல வித உபாயங்களை மனிதர்கள் தேடுகிறார்கள்.

வாலிபர்களுடைய ரத்தத்தை, குழாய் வழியால் வயோதிகர்களுடைய உடலுக்குள் செலுத்தினால்

அவர்களுக்கு யௌவனம் ஏற்பட முடியும் என்று ஒரு கொள்கை இருந்தது. இதைத் தவறு என்று சொல்ல முடியாது. விஞ்ஞானிகள், உடலிலிருந்து சில ஜீவாணுக்களைப் பிரித்து வெகு நாட்கள் மட்டும் வளர்த்துப் பெருகச் செய்கிறார்கள். இப்படி, வளர்க்க யௌவன நிலையில் இருக்கும் மிருகங்களுடைய ரத்தம் வெகு உதவியாக இருக்கிறது. ஆனால், முதுமையை அடைந்த உடலில், உள்ள ஜீவாணுக்கள் இளமைப் பருவத்தில் உள்ள ஜீவாணுக்களைவிட அதிகமான மாறுபாடுகளை அடைந்திருக்கலாம். அப்படி மாறுபாடுகள் அடைந்திருப்பதனால், அவை திரும்ப யௌவன தசையை அடையுமா என்பது சந்தேகந்தான். இளமை நிலையில் இருக்கும் ஜீவாணுக்கள் நீர் நிறைந்தவையாக இருக்கும். ஜீவாணுக்கள் முதுமை அடையும்போது அவற்றில் அடங்கியிருக்கும் நீர் குறைந்துபோகும். அவற்றில் அடங்கிய நீர் குறையுந்தோறும் அவற்றின் பெருகி வளரும் சக்தியும் குறைவுபடும். அதோடு அவற்றிற்கு நீரை ஏற்றுக் கொள்ளும் சக்தியும் குறைந்துபோகிறது. இயற்கை விதிப்படி அணு ஜீவன்களுக்கு இறப்பு இல்லாமைக்குக் காரணம், அவை முதுமை அடையாமையே. அவை முதுமை அடையும் முன்னரே, பிரிவுபடுதல் என்ற முறைப்படி, இரண்டு தனித்தனி அணு ஜீவன்களாகப் பிரிந்து தனித்தனியே வாழத் தலைப்படுகின்றன. ஆனால் மனித சரீரத்தை ஆக்கி அமைக்கின்ற ஜீவாணுக்களோ, முதுமை அடைவதற்கு முந்தியே பிரிந்து, தனித்தனி அணு ஜீவன்களாகி யௌவனத்தோடு வாழும் தன்மையை இழந்துவிடுகின்றன. இருந்தபோதிலும், வம்ச விருத்திக்காக ஒவ்வொரு மனித சரீரத்திற்குள்ளும் ஆயத்தமாகிவரும் அணு ஜீவன்களில், முதுமை அடையாமல் பிரிவுபட்டு யௌவனத்தைக் காக்கிற குணம் குன்றாமல் இருப்பதைக் காண்கிறோம். ஆண் பெண்களின் சம்போகம் ஏற்பட்டு, இருபால்

சந்தான அணுஜீவன்களும் ஒன்று சேர்ந்து இரட்டை மடங்குகளாகப் பெருகி, பலவித அவயவங்களுக்கு ஏற்ற மாறுபாடுகளை அடைந்து, மானிடக் குழந்தையாகப் பரிணமிக்கின்றன.

இப்படி மாறுபாடு அடைந்த அவயவங்களாக இருக்கும் ஜீவாணுக்களின் உணவுக்கும் உணர்ச்சிக்கும் மற்றும் பல ஜீவ உழைப்புகளுக்கும் உடலிலுள்ள மற்ற அணுக்களை எதிர்பார்க்க வேண்டியிருப்பதால் முதுமை ஏற்பட்டுவிடுகிறது. உடலில் இருக்கும் அவயவங்களை ஒத்துழைக்கச் செய்ய, உடலில் 'ரசாயன சாலைகள்' பல உண்டு. இவைகளை ஆங்கிலத்தில் 'டக்ட்லெஸ் க்லாண்ட்ஸ்' (Ductless Glands) என்பார்கள். இவைகளை ரசாயன சாலைகள் என்றே சொல்லவேண்டும். ஏனெனில், இவை விசேஷமான சில ரசாயன சாதனங்களை ரத்தத்தில் செலுத்தி எல்லா அவயவங்களையும் ஒழுங்குபடுத்தி ஒத்துழைக்கச் செய்கின்றன. இந்த ரசாயன சாலைகளின் வேலைக்குக் கேடு வந்தால் உடல் வளர்ச்சிக்குக் குறைகள் ஏற்படும். சிறு பிராயத்திலேயே முதுமை ஏற்படலாம்.

ஆகவே, 'ஒரு காலத்தில் 'தைராய்டு (Thyroid)' என்ற ரசாயன சாலையாகிய அவயவத்திலிருந்து சாரத்தை உட்செலுத்தி ஆயுசை நீடித்துக்கொள்ளலாமோ? யௌவனத்தைத் திரும்பவும் பெறலாமோ?' என்று மேதாவியான வைத்தியர்கள் சிந்திக்கலானார்கள். ஆனால் அது நிறைவேறவில்லை. ப்ரௌன் ஸிக்குவார்ட் (Brown Sequard) என்ற விஞ்ஞானி ஒருவர் தமக்கு முதுமை ஏற்பட்டதால், முன் இருந்த ஆற்றலுடன் வேலை செய்ய முடியவில்லை என்று கண்டபோது, தமது ஜனன அவயவத்திலிருந்து (Testes) சாரத்தை உடலில் செலுத்திக்கொண்டார். இந்தப் பிரயோகத்தினால் தமக்கு வலிமை வந்ததாக அவருக்குத் தோன்றியது.

இதை உணர்ந்து ஸ்டெய்னக் (Steinach) என்ற

ஒரு ஸர்ஜன், ஜனன அவயவ சாரத்தை அதிகமாக்கும் பொருட்டு, பீஜங்களில் இருந்து வரும் குழாயாகிய வாஸ் என்னும் உறுப்பைக் கட்டிவிடும் உபாயத்தைக் கையாண்டார். முதுமை அடைந்த பல ஆடவர்கள் இந்த ரணசிகிச்சையைச் செய்து கொள்ளத் தொடங்கினார்கள். இந்த வைத்திய முறையில் இவர்களுக்கிருந்த நம்பிக்கையினால் ஏதோ யௌவனம் சித்தித்துவிட்டதுபோலத் தோன்றியது. ஆனால், இந்த ரண சிகிச்சையினால் எவ்வித நன்மையும் ஏற்படவில்லை என்பது முற்றும் உண்மை. இதன் பிறகு, வாரனாப் என்ற வைத்திய நிபுணர் சிம்பன்ஸி என்ற உயர்தரக் குரங்கின் பீஜங்களை முதுமை அடைந்தவர்களுடைய அடிவயிற்றில் ஒட்டவைத்து வளரச் செய்தார். அவை பல நாட்கள் வளரவில்லை! சீக்கிரமாகவே பயனற்றுப் போயின. கடந்துபோன யௌவனத்தை மீண்டும் பெறும்பொருட்டு அப்படிச் சிகிச்சை பண்ணிக்கொண்டவர்களுள் எவருமே யௌவனத்திற்குத் திரும்பவில்லை. கடந்த 25 வருஷங்களாக இந்தச் சஸ்திர சிகிச்சை செய்துகொண்டவர்கள் பயன் ஒன்றும் பெறாமல் சடலத்தைப் போட்டு மண்ணுலகை விட்டு அகன்றார்கள்.

சமீப காலத்தில் டேஸ்டோஸ்டிரான் (Testosterone) என்ற ஒரு வகையான மருந்தை இன்ஜெக்ஷன் முறையில் தயாரித்து வருகிறார்கள். இதைப் பீஜ சாரம் என்று கூறலாம். இந்த மருந்தைப் பரீக்ஷை பார்க்கத் தொடங்கினவர்கள், இனிமேல் வாரனாபின் சிகிச்சைக்கு எவரும் ஆளாக வேண்டியதில்லை என்று எண்ணத் தொடங்கியிருக்கிறார்கள். மேலை நாடுகளில் இந்த மருந்தைப் பரீக்ஷை பார்க்கிற வைத்தியர்கள் டேஸ்டோஸ்டிரான் மருந்தை இன்ஜெக்ஷன் மூலமாகவும், உள்ளுக்குக் கொடுக்கும் மருந்தாகவும் கையாண்டு, பீஜக் குறைவினால் உண்டாகும் பலவிதமான சுகக் கேடுகளைச் சொஸ்தப்படுத்தி வருகிறார்கள். இந்த மருந்துப்

பிரயோகத்தினால் சிலருக்குத் தாது புஷ்டி ஏற்பட்டிருக்கலாம். இருந்த போதிலும், இந்த மருந்தினால் ஆயுள் பெருகி வாழ்ந்தவர்களைப்பற்றி நாம் இதுவரையும் கேள்விப்பட்டதில்லை. இந்த மருந்தினால் தாது விருத்தி ஏற்படக் கூடுமாயினும், இருதயம், ரத்தக் குழாய்கள் முதலிய அவயவங்களுக்கு ஏற்படும் தீமைகளைத் தடுக்க முடியும் என்று எப்படிச் சொல்ல முடியும்? பீஜசாரம் எல்லா அவயவங்களுக்கும் ஒன்று போலவே சக்தியைப் புனருத்தாரணம் செய்யுமா என்பது சந்தேகந்தான். கான்ஸருக்குக் காரணமாகக் கூடிய சாதனங்களைத் தயாரித்துக் கொடுக்கும் அதே சரக்குகளால் இந்தப் பீஜசாரமும் அமைந்திருப்பதால் இந்த மருந்தினால் தாது விருத்தியைத் தேடும்போது, ஒருவேளை கான்ஸருக்கும் காரணமாகலாம். அப்படி ஆகாது என்று உறுதியாக யார் சொல்ல முடியும்? சிலருக்கு இந்த மருந்து தாது விருத்தி மருந்தாகப் பலித்த போதிலும், இது ஒருபோதும் ஆயுளை நீடிக்கச் செய்யும் மருந்தாகாது.

வாழ்நாட்களை நீடிக்கச் செய்வதற்குச் சில திட்டவட்டமான விதிகள் உண்டு. முதுமை என்பது இயற்கையாகச் சம்பவிக்கக் கூடியது; என்றாலும், அதற்கு வேகம் கொடுப்பவை நம்முடைய இயம நியமங்களும் ஒழுக்கங்களும் வாழ்க்கையில் தடுக்க முடியாத சில சம்பவங்களுமேயாம். மற்றொரு காரணம் தொற்று நோய்களுக்கு இரையாவது. முதுமை அடைந்தவர்களைத் தொற்று நோய்கள் அதிகமாகப் பாதிப்பதில்லை. எனினும், சிறு பிராயத்தில் வந்த தொற்றுநோய்களே, முதுமை அடையும்போது, ரத்தாசயம், ஆமாசயம் மூத்திரப்பை முதலிய அவயவங்களுக்கும் கீல்களுக்கும் வரும் கேடுகளுக்குக் காரணமாகின்றன. ஆகவே, முதுமை நாட்களைச் சுகமாகக் கழிப்பதற்கு வேண்டிய உபகரணங்களைச் சிறு பிராயத்திலிருந்தே தேடிக்

கொள்ள வேண்டும். அதாவது, தொற்று நோய்கள் பாதியாதபடி உடலைக் காப்பது, அப்படியே பாதித்தாலும் அவற்றின் தோஷங்களைக் குறைக்கத் தக்க வைத்திய முறைகளைக் கையாளுவது என்பனபோன்ற முன் - எச்சரிக்கைகள் இன்றியமையாதனவாம். முதுமைப் பருவத்தை உத்தேசித்து, வாலிபத்திலேயே உடற்பயிற்சி செய்து தசைகளையும் நரம்புகளையும் முழு உடம்பையும் திண்ணிதாகச் செய்துகொள்ள வேண்டும். சரியான போஷிப்புக் கொடுக்கக் கூடிய உணவுகளைப் புசித்து, மிதமாகத் தேகப்பயிற்சி செய்து, உடலைச் சரியான முறையிலே காப்பாற்றிக்கொள்ள வேண்டும். வாலிபத்தில் ஜீர்ணசக்தி நன்ருக இருப்பதால் ஆமாசயத்துக்கு அதிக பாரமான வேலை இடுவது சகஜம். சிலர் சாப்பாட்டில் போட்டி போடுவதும் உண்டு. வாலிப நாட்களில் உடலில் நேரிடும் கேடுகள் வெளிப்படாமல் இருக்கலாம். முதுமை அடையும்போது, ஜீர்ணக் கருவிகள், நாம் வாலிபத்தில் அவற்றிற்குச் செய்த அக்கிரமங்களை எடுத்துரைக்கும்.

புகையிலை, லாகிரிப் பொருள்கள், மதுபானங்கள் இவற்றை உட்கொள்ளுதல் முதலிய கெட்ட பழக்கவழக்கங்கள் வாலிபத்தில் ஏற்படலாம். இவற்றை நாளடைவில் மிதமிஞ்சி உபயோகிக்கவும் நேரிடலாம். இருதயத்துக்கும் நரம்புகளுக்கும் இவற்ருல் விளையும் கேடுகள் முதுமை அடையும்போது வெளிப்படும். ஆகையால், லாகிரிப் பொருள்களை உபயோகியாமல் இருப்பது நலம். ஒருவேளை உபயோகித்தாலும் மிதமாக உபயோகிக்க வேண்டும். இல்லாவிடில் உடல் வலிமை சிதைந்து ஆயுள் குன்றலாம்.

பற்களைச் சுத்தமாக வைத்திருந்தால் ஜீரணம் நன்ருயிருக்கும். ஆகவே ஆயுளை நீடித்துக்கொள்ள விரும்புகிறவர்கள் தந்த-சுத்தத்தைப் பேணவேண்டும். பற்கள் உறுதியாகவும் சுத்தமாகவும் இருக்கவேண்டு

மாயின் ஜீர்ணம் சரியாக இருக்கவேண்டும். இரண்டும் ஒன்ருேடு ஒன்று இசைந்தவை.

நாம் செய்யும் தொழில், நாம் வாழும் வீடு, இருக்கும் ஊரில் உள்ள சீதோஷ்ணநிலே இவை யாவும் வாழ் நாட்களேக் குறைக்கவும் கூட்டவும் முடியும். நிலக்கரிச் சுரங்கங்கள், யந்திரசாலேகள், ரசாயன சாலேகள் இவை போன்ற தொழில் நிலேயங்களில் உழைப்பதனுல் சில நோய்களுக்கு நாம் ஆளாகலாம். நாம் வாழும் வீடு சுகாதாரக் கட்டுப்பாடுகளுக்கு ஏற்றதாக இராமலும் சூரிய வெளிச்சமும் நல்ல காற்றும் பரவ வசதி இல்லாமலும் இருந்தால் நமக்குப் பல நோய்கள் வரக் கூடும். ஆயுளேக் குறைக்க இவைகளும் காரணமாகலாம். நோயற்ற வாழ்க்கையில் சூரிய வெளிச்சத்துக்கும் நல்ல காற்றுக்கும் உள்ள அவசியத்தை நாம் இங்கே விவரிக்கத் தேவையில்லே. சீதோஷ்ண நிலேயையே எடுத்துக் கொள்வோம். சாதாரணமாக உஷ்ணப் பிரதேசத்தில் வசிக்கும் ஆட்களேவிடக் குளிர்ந்த பிரதேசத்தில் வசிப்பவர்கள் அதிக நாட்கள் வாழ்கிருர்கள். இதற்காகவே, பொருள் வசதியும் பிற சௌகரியங்களும் உள்ளவர்கள், சென்னப் பட்டணம்போன்ற உஷ்ணப் பிரதேசங்களே விட்டு, ஆண்டுதோறும் சில நாட்களாவது, பங்களூர், கோடைக்கானல், குன்னூர் முதலிய ஊர்களுக்குப் போய் வாசம் செய்கிருர்கள்.

மனநிலே தேகத்தின் சுக நிலேயை மாற்றக் கூடியது. அதுபோலவே தேகத்தின் சுக நிலேயும் மன நிலேயை மாற்றக்கூடியது. இக்காரணத்தால் சஞ்சலம் அடையாதவாறு மனநிலேயைக் காப்பாற்றுவது அவசியம் என்று நம் பெரியோர்கள் சொல்கிருர்கள். இதற்கு வேண்டிய விதி விலக்குகளேயும் நித்திய கர்மானுஷ்டானங்களேயும் வகுத்திருக்கிருர்கள். சந்நியாசிகள் சீரிய மனநிலே உடையவர்களாய் இருக்கும்பொருட்டு உணவு, உடற்பயிற்சி, சரீர சுத்தி - இவற்றை ஒழுங்கு படுத்துவது அவசியம் என்று

கூறியிருக்கிறார்கள். முதுமை அடையும்போது சந்நியாசியைப்போல வாழ்நாட்களைக் கழிக்கவேண்டும் என்று விதித்திருப்பதும், வாழ்நாட்களை நீடிக்கச்செய்து சுகமாக இருக்கத்தான். குடும்ப பாரங்களைப் பிள்ளைகளிடம் ஒப்படைத்துக் கவலைகளை நீக்கிக்கொள்ளலாம். உலக பரிசயத்தோடு வாழ்க்கைப் போராட்டத்திலே அடைந்த பலவகையான அநுபவ ஞானமும் பெற்ற முதியவர்கள் தம் மக்களுக்கும் மற்ற வாலிபர்களுக்கும் உலக வாழ்க்கைப் பிரச்னைகளைத் தீர்க்க எளிதில் உதவி புரியக் கூடும். நாம் உலகத்தோடு பழகிப் பெற்றிருக்கும் அநுபவங்கள் நமக்குப் பின் வரும் சந்ததியாருக்குப் பயன்படக் கூடியவை. நமது அநுபவங்களை, விரும்பிக் கேட்கும் வாலிபர்களுக்கு வழங்க ஆயத்தமாக இருக்கவேண்டும். அவர்கள் அவற்றை ஏற்றுக் கொள்ளாவிட்டால் மன வருத்தம் அடையலாகாது. 'முதியவர்களாகிவிட்டோம், இனி நாம் எவ்வித உழைப்புக்கும் பயன்படமாட்டோம்!' என்றவைபோன்ற சிந்தனைகளால் அதைரியம் அடைந்து மனம் சோர நாம் இடங் கொடுக்கலாகாது. முன்போல் உழைக்கும் சக்தி அற்றுப்போனல் என்ன? மனம், முன்போலப் புதுப்புது விஷயங்களைக் கற்றுக்கொள்ள முடியாத நிலைக்கு வந்துவிட்டால் என்ன? புதிய விஷயங்களின் நோக்கங்கள் எவை என்று அறிந்துகொள்ளத் திராணியுள்ளவர்கள் முதியவர்களே. ஆகவே, முதுமையிலே புதிய விஷயங்களிலும் புதிய பிரச்னைகளிலும் ஈடுபட்டு அவற்றோடு பழகவும் பரிமாறவும் பழக வேண்டும்.

மூளையில் இருக்கும் நரம்பு-ஜீவாணுக்கள் மற்ற ஜீவாணுக்களை விட வெகு நாட்கள் சக்தி குன்றுமல் உழைக்கும் இயல்புடையவை. இதனாலேதான் முதுமை அடையும் காலத்தில் இளமை அநுபவங்கள் பசுமரத்தில் பதிந்த ஆணிபோல் அகலாதிருக்கின்றன. மேலும், சிந்திக்கவும் விஷயங்களை ஆராய்ந்து நிதானிக்கவும் இந்த

அநுபவ ஞானம் பயன்படுகிறது. இளமையில் விஷயங்களைக் கற்றுக்கொள்ள முடிந்தவரையிலும் கற்றுக்கொள்வது நலம். இவை மட்டுமே முதுமைப் பருவத்தில் மறந்து போகாமல் மனத்தில் பதிந்திருப்பவை.

நம்முடைய பிள்ளைகளிடம் குடும்ப பாரத்தை ஒப்படைத்துவிட வேண்டும் என்றோம். இது மிகவும் அவசியமான காரியம். முதுமை அடைந்த பிறகு பணம் சம்பாதிக்க வேண்டுமே என்னும் கவலை ஏற்பட்டால், அதுவே ஆயுளைக் குறைத்துக்கொள்வதற்குப் போதிய காரணமாகும். மேலும், முதுமையில் பண விஷயமாகப் பிறர் நம்மை ஏமாற்றிவிடலாம். இப்படிப்பட்ட நிலையில் உடல் வலிமை குன்றிச் சாதுக்களாக இருக்கும் விருத்தாப்பியரை, நம்பிக்கைத் துரோகம் செய்ய ஆட்கள் தயாராக இருப்பார்கள். முதுமையில் பண நஷ்டம் ஏற்படும் போது அவர்கள் எளிதில் அதைரியம் அடையும் மன இயல்பு ஏற்பட்டுவிடுகிறது. வாலிபராய் இருந்தால், பின்னும் உழைத்துப் பணம் சம்பாதித்துக்கொள்ளலாம் என்ற தீர்மானம் ஏற்படும். முதுமை அடைந்தவர்கள் வலிமைக் குறைவினல், உழைத்துச் சம்பாதிக்க முடியாது. நஷ்டமான பணத்தைத் திரும்பப் பெற முடியாதே என்ற ஏக்கம் அடையலாம். உடல் மெலிந்து, மரணமும் வெகு விரைவாக நெருங்கி வரலாம்.

மனச் சக்தி ஆயுள் முழுவதும் பெரும்பாலும் குறைவுபடாமலே இருக்கும். உடலின் சக்தியோ முதுமை அடையும்போது குறைந்து போகும். இப்படிக் குறைந்துபோகும் உடலின் உழைப்புக்குத் தகுந்தபடி ஒத்துழைக்க மனத்தைப் பழக்கவேண்டும். 'மனம் போன போக்கெல்லாம் போக வேண்டாம்' என்ற உபதேசத்தை முதுமைப் பருவத்தினர் எப்பொழுதும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். மனம் எத்தனையோ காரியங்களைச செய்யவேண்டும் என்று விரும்பலாம். எனினும் மனம் போனவாறெல்

லாம் செய்யத் தேகத்தில் வலிமை உண்டா? எடுத்த காரியம் முடிவதற்கு முந்தியே மரணம் அடைந்து விட்டால் அந்தக் காரியத்தின் கதி என்னவாகும் என்றெல்லாம் ஆலோசனை செய்யலாம். விருப்பமான சில விஷயங்களை நிறைவேற்ற இளமையில் எண்ணி யிருக்கலாம். குடும்ப யோக க்ஷேமத்தை உத்தேசித்தும், மற்றும் சில காரணங்களைச் சிந்தித்தும் நாம் செய்யக் கருதிய சில காரியங்கள் நிறைவேருமல் போயிருக் கலாம். முதுமை அடைந்து, சம்சார பந்தங்கள் தீர்ந்த பிறகு அவற்றை நிறைவேற்றிக்கொள்ளலாம் என்று நெடுங்காலமாக மனத்தில் சிந்தனை செய்திருக்கலாம். சுயநலமாக உத்தேசித்த உழைப்பாக இருந்தால், நிறை வேருதபோது, ஆசா பங்கத்தினுல் உண்டாகும் துக்கத் துக்கு நாம் ஆளாகலாம். பொது நன்மைக்கான காரிய மாக இருந்தால் மற்றவர்களுடைய உதவியை நாம் பெற முடியும். உழைப்பும் நமக்குப் பாரமாகத் தோன்ருது. பொது ஜனங்களுடைய அன்பையும் நாம் பெற முடியும். இத்தகைய பொது நன்மையான காரி யங்கள் நமக்குச் சந்தோஷத்தைக் கொடுக்கத் தவரு. முதுமை அடைந்த மனம் விசாலமானது; பொது விஷயங்களுக்குப் பயன்படக் கூடியது. பண்டைக் காலங் களில், கிராமக் காரியங்களையும் ராஜாங்க விஷயங்களை யும் ஆலோசனை செய்தவர்கள், முதுமை அடைந்த வர்களே. தற்போது, இந்த உலக மகாயுத்தத்தைத் கிளப்பிவிட்ட ஹிட்லரும் அவருடைய உழைப்பாளி களும் முதுமை அடைந்தவர் அல்லர். முதுமை அநு பவம் இல்லாத யௌவனப் பருவத்தினர் ஆலோசனை செய்து கிளப்பிவிட்ட யுத்தத்தில், வெற்றி அடைந்த நேச தேசங்களை நடத்திய தலைவர்களோ முதுமை அடைந்தவர்கள்.

பொது விஷயங்களில் மனத்தைச் செலுத்த எல்லாராலும் முடியுமா? பொதுஜன சேவை யாவருக்

கும் ஒன்றுபோலச் சாத்தியமாகுமா? உழைக்க முடியாத வர்கள் என்ன செய்வார்கள்? பொது விஷயங்களில் ஈடுபட்டுப் பொதுஜன சேவை செய்ய முடியாதவர் கள் சம்சார சாகரத்திலேயே அழுந்திக் கிடக்கவேண்டும் என்பதில்லை. இதிகாச புராணங்களை வாசித்து இன்பம் அடையலாம்; தாமாகவே வாசிப்பதற்கு வசதிகளும் வேறு துணைக் கருவிகளும் இல்லாவிட்டால், அவற்றை வாசித்து வியாக்கியானம் செய்வதில் தேர்ந்தவர்கள் அவ்வப்போது நடத்திவரும் காலக்ஷேபங்களுக்குப் போய்க் காதாரக் கேட்டு, மனதாரச் சிந்தித்து, ஆத்மாவை உயர்ந்த நிலைகளுக்கு உயர்த்தி, லௌகிகக் கவலையைத் தவிர்த்திருக்கலாம். முதிர் வயதில் ஆத்மிய விசாரணையில் இறங்குதல் இயற்கையே. முதுமைப் பருவத்தில் உடல் வெகு விரைவாகப் பலவீன மடையத் தொடங்கிவிடுகிறது. ஆனல், மனமோ அவ்வளவு விரைவாகப் பலவீனம் அடைவதில்லை. இதனல் மனத்திற்கும் உடலுக்கும் உள்ள ஒத்துழைப்புக் குறைவு படுகிறது. 'ஆத்மா உடலோடு சம்பந்தப்படாத அதாவது உடலோடு பரிணமியாத வஸ்து; தனித்திருக்கும் சூக்ஷ்ம தத்துவம். அது உடலிலேயே உற்பத்தியான தன்று. அது பரமாத்மாவின் அம்சமாக இருப்பது. பரமாத்மாவோடு லயமாய்விட ஆசைகொண்டு, அந்த லயத்தை அடைய ஞான மார்க்கத்தைத் தேடவேண்டும் என்ற அவா உடையது. முதுமையை எட்டிப் பார்க்கும் நிலையில் இருக்கின்ற மானிட வாழ்க்கைக்கு, இவ்வுண்மையை உணர்ந்த நம் முன்னோர் வானப்பிரஸ்தம், சந்நியாசம் என்ற நிலைகளை உசிதமானவையாகக் குறித்து வைத்தனர். அண்டாண்டகோடிப் பிரம்மாண்டங்களால் ஆன இந்த அண்டத்தில் மனிதன் ஓர் அற்பச் சிறு பிண்டமாகக் காணப்படுகிருன். மகா அற்பப் பிராணியாகக் காணப்படுகின்ற மனிதன் தன் ஆத்மாவுக்கு என்றும் அழியாத, நிலையான ஓர் இடத்தை ஜடலோக

மெங்கும் தேடியும் கண்டடைய முடியாமல், முடிவிலே அகண்டமாய், விசுவரூபமாய், எங்கும் வியாபித்திருக்கும் பரமாத்ம ரூபத்தில் கலக்க விரும்புகிறான்' என்று சொல்லுகிறார்கள். இதனாலேதான் இளமையிலும் காளைப் பருவத்திலும் பம்பரம்போல் ஆடி, ஓடித் திரிந்த மனிதன் முதிர் வயதில் ஆத்மிக விஷயங்களை ஆராயும் துறையில் இறங்கிவிடுகிறான். இதனால் மனம் தத்தளிக்காத நிலையில் நிற்கும். சாந்தி ஏற்படும்.

ஆத்மிய விசாரணை, பக்தி மார்க்கத்துக்கு வழி காட்டுகிறது. நமது நாட்டில் பக்தி மார்க்கத்தில் புகும் அன்பர்களுக்கு அநுகூல சாதனங்களாக, புண்ணிய தீர்த்தங்கள் என்றும் கோயில்கள் என்றும் திவ்விய புருஷர்களின் ஆசிரமங்கள் என்றும் பல ஏற்பட்டிருக் கின்றன. தீர்த்தாடனம் செய்வதும் புண்ணிய க்ஷேத் திரங்களுக்கு யாத்திரை செல்வதும் மனத்துக்கு உப சாந்தியைத் தரும். புதுப் புதுக் காட்சிகள், நாம் நெடுங்காலம் பழகிய சூழ்நிலைகளை மறக்கச் செய்யும். புதுப் புதுத் தெய்விகச் சிந்தனைகளை எழுப்பும். திவ் விய ஸ்தலங்களுக்கு யாத்திரை போகிறவர்களிடம் தன்னலமே எண்ணும் இயல்பும் பிறர் நலத்திலே உதா சினமும் காணப்படா. மேலும், தேகமும் ஆரோக்கியம் அடையும். இவைகளும் ஆயுளை நீடிக்கச் செய்வதற்குச் சிறந்த சாதனங்களே.

இவற்றை யெல்லாம் சிந்திக்கும்போது, முதுமை அடைந்தவர்களுக்கு இவ்வுலகில் இடம் இல்லை; சீக்கிர மாகவே பரலோகப் பிராப்தி அடைந்துவிடுவதுதான் நலம் என்று நினைப்பது தவறல்லவா? முதுமைக்குள்ள தள்ளாமைக்குப் பரிகாரங்கள் தெரிந்துகொள்ள, இந்தக் காலத்தில் பல வசதிகள் உண்டு. அவைகளை உபயோ கித்து, உலக க்ஷேமத்திற்கும் குடும்ப க்ஷேமத்திற்குமாக உழைக்கலாம். கால்கள் தளர்ந்து போனால் தடியூன்றி நடந்து செல்லலாம்; வாகனங்களில் ஏறிப் பிரயாணம்

செய்யலாம். கண் பார்வை குறைந்தால், கண்ணுக்குக் கண்ணுடி அணிந்துகொண்டு நல்ல புத்தகங்களேயும் பத்திரிகைகளேயும் படித்து, மனத்துக்குக் களிப்பைத் தேடலாம். காது மந்தமாளுலும், நூதனக் கருவிகளே வாங்கி உபயோகித்துக் காது கேட்கச் செய்யலாம். இப்படிப் பலவிதமாக, முதுமையால் ஏற்படும் குறைவுகளே நிவர்த்தி செய்து மனத்தையும் உடலேயும் நன்ருகப் பாதுகாத்து வந்தால், வாழ்நாட்களே ஏன் நீட்டித்துக் கொள்ள முடியாது?

செல்வம் உடையவர்கள் வைத்தியரைக் கொண்டு, அடிக்கடி தங்கள் உடலேக் கவனிக்கச் சொல்லி அவ்வப்போது தகுந்த பரிகாரங்களேத் தேடி, சரீரத்தின் சுகத்தைக் காத்து, வாழ்நாளே நீடிக்கச் செய்யலாம். பிறந்து, வளர இடம் தந்த உலகத்திற்குப் பிரதியுபகாரமாகச் செய்யவேண்டிய கடமைகளே நிறைவேற்ற வேண்டும். இதற்காகவே நமது வாழ்நாட்கள் நீடித்திருக்கவேண்டும். வாழ்நாட்களே எல்லாம் வீணுக்காமல் பொதுநலக் காரியங்களில் ஈடுபடுத்துகின்ற காந்தியைப்போன்ற மகாத்மாக்கள் உயர்ந்த லக்ஷ்யங்களேத் தம் வாழ்க்கையில் மேற்கொண்டு, மனத் திடத்தினுல் தேக வலிமையைக் காத்து ஆயுள் நீடித்திருக்கச் செய்வது உலக க்ஷேமத்திற்காக அல்லவா?

'ஆயுளுக்கு எல்லே உண்டா?' இக்கேள்வியின் மறைவில், 'ஆயுள் முடிவற்றதாகவே எப்போதும் இருந்துவிடாதா?' என்ற ஒரு கேள்வியும் தொனிக்கிறது. ஆயுள் முடிவின்றி நீடித்தால் அது சுகாநுபவங்களோடு கூடிய யௌவனமாக இருக்கவேண்டுமே! இது சித்தியாகிவிட்டதென்ருல், இவ்வுலகத்தில் முதுமை அடைந்தவர்களே இருக்கமாட்டார்கள். உலகத்தில் பிறக்கும் குழந்தைகளின் எண்ணிக்கையும் வரவரக் குறைந்து, வெகு விரைவில் உலகத்தில் சிசு ஜனனமே இல்லாமல் போய்விடும். குழந்தைகள் பிற

வாத உலகம் பாழுலகமே! சுகதுக்கங்கள் கலந்திருந்தால் அல்லவோ சுகத்தை ஆவலோடு தேடி அதை அநுபவிப்போம்? பால்யம், கௌமாரம், யௌவனம், வார்த்தக்கியம் என்ற பருவங்கள் இருந்தால் அல்லவோ யௌவனத்தைச் சரியானபடி அநுபவிக்க முடியும்?

ஆகவே, மானிட வாழ்வுக்கு எல்லை இருக்க வேண்டுமா, அல்லது அது எல்லையற்ற யௌவனமாக இருக்க வேண்டுமா என்ற பிரச்னையை ஆழ்ந்து சிந்தித்தால், மானிட வாழ்வை நீடிக்கச் செய்வதற்கான சாதனங்களை மேற்கொண்டபோதிலும், வாழ்நாட்களுக்கு ஒரு முடிவு இருந்துதான் ஆகவேண்டும் என்ற முடிவுக்குத்தான் நாம் வருவோம். சூரியன் உதயமானல் அது அஸ்தமனமாக வேண்டும். அப்படி நிகழ்ந்தால்தான் சூரியோதயத்துக்கு மகிமை உண்டு.

# 11

# மனிதன் ஏன் மரணம் அடைகிறான்?

'பேசுவதற்கு வேறு நல்ல விஷயம் இல்லையா? சாவைப்பற்றிப் பேசுவானேன்?' என்று கேட்கலாம். எங்கள் தெருவில் அடிக்கடி வாத்திய கோஷம் கேட்கும். அவசர அவசரமாக வாசலில் போய்ப் பார்த்தால், சில தருணங்களில் சுவாமி பவனி வருகிற காட்சியும் இல்லை; கல்யாண ஊர்வலமும் இல்லை; கடைசி ஊர்வலத்தைத் தான் பார்க்க நேரிடும். உலகத்தில் பிறப்பு உண்டானால் இறப்பும் உண்டு. ஆகவே, உயிரைக் குறித்துப் பேசலாமென்றால் இறப்பைக் குறித்து ஏன் பேசலாகாது?

'மனிதன் ஏன் மரணம் அடையவேண்டும்; அவன் நித்தியமாக வாழ முடியாதா? முன் காலத்தில் மனிதன் ஆயிரக்கணக்கான வருஷங்கள் வாழ்ந்ததாகப் புராணக் கதைகளில் கேள்விப்பட்டிருக்கிறோமே. இக்காலத்திலும் அப்படி ஏன் வாழக்கூடாது?' எனக் கேட்டால், இயற்கைத் தெய்வத்தின் சித்தமென்றே சொல்ல வேண்டும். மேலும், புராணத்தில் சொல்லியிருப்பவையெல்லாம் உண்மை என்று யாரால் நிரூபிக்க முடியும்? மனிதனுக்கு வயது நூறுதான் என்று மானிட சரித்திர விஞ்ஞானிகள் கூறுகிறார்கள். ஆனால் நூறு வயதுக்கும் அதிகமாகச் சிலர் இன்றைக்கும் வாழ்ந்து வருவதாகக் கேள்விப்படுகிறோமே. அற்பாயுசும் நீடித்த வாழ்வும் பாரம்பரியமாக ஏற்படுகின்றவை. ஆயினும் நம்மைச் சூழ இருக்கும் வாழ்க்கை நிலையையும் பழக்க வழக்கங்களை

யும் சீர்திருத்திக்கொண்டால் நமது வாழ்நாளையும் நீடிக்கச் செய்யலாம் என்பது தெளிவு.

இவ்வாறு, வாழ்நாளை நீடித்துக்கொள்ளுவதற்கும் ஓர் அளவு உண்டு. உடல் வளர்ச்சி என்பது ஆரம்பத்தில் வேகமாக வளர்ந்து, பின்பு குறைவுபடும் சூரிய வெளிச்சம் போன்றது. ஆகவே, மானிட வாழ்நாளை உதய காலமென்றும் உச்சிக் காலமென்றும் அஸ்தமன காலமென்றும் பாகுபாடு செய்யலாம். உதய காலம் என்பது 30 வருஷம் நீடித்திருப்பது. இந்தக் காலத்தில் உடல் வளர்ந்து முதிரும். இதற்குப் பிறகு சுமார் நாற்பது வயதளவும் உச்சிக் காலம் எனலாம். இதற்குப் பிறகு மெதுவாக நரம்புகளும் தசைகளும் க்ஷீணிக்கத் தொடங்குகின்றன. இந்த நிலைமையில், நோய்க்கும் ஆபத்துக்கும் இடங் கொடாமல் உடல் இருந்தால், சுமார் 40 வருஷம் மனித வாழ்வு நீடிக்குமென்று தீர்மானமாகச் சொல்லலாம்.

இதற்குப் பிறகு நமது உடலில் இருக்கும் ஒவ்வொரு ஜீவ-அணுவும் வளர்ச்சியிலும் பெருக்கத்திலும் குறைந்து விடுகிறது. ரத்தக் குழாய்கள் முன்போல வேலை செய்வதில்லை. உணர்ச்சி நரம்புகள் மந்த மடைகின்றன; அவயவங்கள் தளர்ந்துவிடுகின்றன. ஜீர்ண சக்தி குறைவுபடவே, உண்ணும் உணவுப் பொருள்கள் ஜீர்ணக் கருவிகளுக்குப் பாரமாகிவிடலாம். முன் போல் அதிக வேலை செய்யவோ அதிகமாக உண்ணவோ முடியாது. உடலில் எல்லா அங்கங்களிலும் அவயவங்களிலும் நீரோட்டம் குறைந்துவிடுகிறது. நரம்புகள் ஒன்றோடொன்று ஒத்துழையாமல், பழைய மோட்டார்கார் ஒன்றிலே அதிக பாரம் ஏற்றுவதனால் ஏற்படுகிற விபத்து உடலுக்கும் ஏற்படலாம். இருதயமோ மூத்திரகோசமோ மூளையைச் சுற்றி இருக்கும் ரத்த நரம்புகளோ கேடு அடைந்து வெகு சீக்கிரமாக மரணத்தைக் கூவி அழைக்கும்.

ஒருவனை, 'இவன் உயிர் இழந்தான்' என்று எப்பொழுது சொல்லலாம்? 'இதற்குப் பதில் சொல்வது கஷ்டமா?' என்பார்கள். மூச்சு நின்றுவிட்டது; நாடியும் அடிக்கவில்லை; இவன் இறந்தான் என்று சொல்ல இவை போதுமல்லவா?

ஆனால், வைத்தியர்கள் இதை ஒப்புக்கொள்ள மாட்டார்கள். உடல் அசையாமலும், மூச்சுவிடுவது கண்ணுக்குப் புலப்படாமலும் தன் நினைவிழந்த யோகி போன்ற ஒருவகை நிலையும் உண்டு. இப்படிப்பட்ட நிலையை மரணமென்று சொல்ல முடியுமா? இந்த நிலையில் இருக்கும் உடலில் படிப்படியாக உயிர் தோன்றி வெளிப்படக்கூடுமே. நீரில் விழுந்து மூழ்கினவனைச் சீக்கிரமாக எடுத்துவிட்டால், அவன் மூச்சு நின்று, தன் நினைவற்றிருந்த போதிலும், இருதயம் மட்டும் அடித்துக்கொண்டிருக்கும். சில வேளைகளில் இருதய ஓட்டம் நமக்குப் புலப்படாமலே இருக்கலாம். இந்த நிலைமையில் மூச்சு உண்டாவதற்கான விதிகளைக் கையாண்டு, மறுபடியும் இருதய இயக்கத்தை உண்டு பண்ணிப் பிழைக்கச் செய்துவிடலாமே. விசேஷமான வைத்திய முறைகளைக் கையாண்டு, நின்றுபோன இருதயத்தையும் இயங்க வைத்து, இறந்தவன் என்று தோன்றிய மனிதனையும் பிழைக்கச் செய்யலாமே! தவளை, ஆமை இவைகளைப்போன்ற பிராணிகளை அறுத்து, இருதயத்தைத் திறந்து வைத்தாலும், இருதயம் வெகு நேரம் அடித்துக்கொண்டிருக்கும்; மூச்சு இராது; உடலின் மற்ற இயக்கம் ஒன்றுமே இராது. இப்படி இருதய இயக்கத்தை மட்டும் கொண்டிருக்கும் இந்தப் பிராணிகளைத் திரும்பப் பிழைப்பிக்க முடியாது. இப்படிப்பட்ட நிலையிலிருக்கும் இந்தப் பிராணிகளின் உடலை இறந்து போகவில்லை என்று சொல்ல முடியாது.

இவ்வாறு உயிர் மறைந்திருப்பவைகளைப் பார்க்கும் போது, உயிர் உடலில் ஒரே இடத்தில் இல்லை என்ப

னும், ஒவ்வொரு ஜீவ-அணுவிலும் இருக்கிற ஒவ்வோர் உயிரும் தத்தம் கருமத்தைச் செய்வதோடு ஒன்றாக் கொன்று இசைந்து மனித சரீரமாகிய மண்டலத்திலே சமூக தர்மத்தையும் நிறைவேற்றி வருகிறது என்பதும் விளங்கும். இந்தச் சமூக தர்மம் மனித உயிராகப் பரிணமிக்கிறது. இருதயம், மூளையின் மூலஸ்தானம், சுவாசக் கருவிகள் முதலிய முக்கிய அங்கங்கள் ஏதேனும் ஒரு காரணத்தால் வேலை செய்யாமல் நின்றுவிட்டால் மனித உயிர் இயங்காமல் உள்ளடங்கிவிடும். வெகுநேரம் வரையில் ஒவ்வொரு ஜீவ-அணுவும் தன்னால் கூடினமட்டும் உயிரைக் காப்பதிலேயே முனைந்து நிற்கும். இருதயமும் சுவாசக் கருவிகளும் சீக்கிரமாகவே வேலை செய்யத் தொடங்கிவிட்டால் இந்த ஜீவ அணுக்களிலே உயிர் மலர்ச்சி உண்டாகி, சமூக உயிராகி, மனித உயிராகப் பரிணமிக்கிறது. உணவையும் உணர்ச்சியையும் அடையும் பொருட்டுச் சமூக வாழ்க்கையைக் கோரியிருக்கும் இந்த ஜீவ-அணுக்களுக்கு அவை வெகு நேரம் வரைக்கும் அகப்படாவிட்டால் மரணம் சம்பவிக்கும்.

## 12

# வாழ்வதற்கே உயிர்

"ஸஞ்சிதம், ஆகாமியம், பிராரப்தம் என்ற கருமங்களின் பலனால் 'புனரபி ஜனனம் புனரபி மரணம்' என்று இப்படியே பிறந்து பிறந்து இறந்து இறந்து வருகிறோம்; பிறப்பும் இறப்பும் இல்லாமலே இருக்கவேண்டும்" என்பர் சிலர். "உலக வாழ்க்கையை விரைவிலே கழித்துப் பரலோகம் சேர்ந்து, பின்பு பிறப்பில்லாமலே இருக்கவேண்டும்" என்பர் மற்றொரு சாரார். "கடவுளுடைய அன்பைப் பெற்றவர்கள் யௌவனத்திலேயே மாண்டு பரலோகத்தை அடைகிறார்கள்" என்பர் மற்றும் சிலர். இப்படியே பலவிதமாகப் பலர் பேசும் அபிப்பிராயங்களைச் சாதாரணமாகக் கேட்கிறோம். இவர்கள் இவ்வுலகத்தை ஒரு சிறைச்சாலையாகவும், இதில் வாழும் உயிர்களை-விசேஷமாக மனிதர்களைக்-கைதிகளாகவும் கருதுகிறார்கள். சுகமென்பது இவ்வுலகில் இல்லை என்பதும், இவ்வுலகில் நாம் அநுபவிக்கும் இன்பம் அனைத்தும் சிற்றின்பம் என்பதும் இவர்களுடைய அபிப்பிராயம். துயரமே இல்லாத சுவர்க்கலோகம் ஒன்று இருப்பதாகவும், இகலோக வாழ்க்கையை அநித்தியமாகக் கருதி வாழ் நாட்களை வெகு விரைவிலே கழித்துவிட்டு, அந்தப் பேரின்ப லோகத்தை அடைய வேண்டும் என்பதும் இவர்களுடைய கொள்கை. இவ்விதமாக இவர்கள் பேசிப் பல கொள்கைகளைக் கொண்டிருந்தபோதிலும், சந்தான பாக்கியத்தைச் சகல பாக்கியங்களிலும் சிறந்ததெனவும், புத்திரன் இல்லாதவர்கள் 'புத்' என்னும் நரகத்திலிருந்து தப்ப முடியாதெனவும் கூறுவார்கள்.

இதையெல்லாம் ஆலோசித்துப் பார்த்தால், பேரின்ப நிலையை அடைவதற்குச் சிற்றின்ப வழியிலே சந்தான பாக்கியம் உடையவர்களாக இருக்கவேண்டுமென ஏற்படுகிறதல்லவா? சந்ததி வேண்டுமானால் சிற்றின்ப நுகர்ச்சிக்கு இடமான இகலோக வாழ்க்கையை வாழ்ந்தே தீரவேண்டும். உலகில் சகல உயிர்களும் தம் சந்ததிப் பெருக்கத்தினாலேதான் நிலைத்திருக்கின்றன. சகல ஜீவராசிகளும் உலகில் தோன்றிய நாள் முதலாகச் சந்தான உற்பத்தியையே நோக்கமாகக்கொண்டு வாழ்கின்றன. இப்படிப்பட்ட இயற்கைச் சட்டத்தால் இயங்குகின்ற உலகத்தில் மனிதன் மட்டும் துயரக் கலப்பற்ற சுகந்தான் வேண்டும் என்று ஆசைப்படுவது இயற்கைதான்; பிறவிமுதல் இந்தச் சுகத்தையே தேடுகிறான். துன்பம் என்று ஒன்று இருப்பதனாலேதான் இன்பத்தை அநுபவிக்க முடிகிறது என்பதும் துன்பத்தை வென்ற பிறகுதான் இன்பத்தை அடைய வேண்டும் என்பதும் யாவருக்கும் தெரிந்த விஷயமாக இருந்தாலும், இதை மறந்து, வேதாந்தம் பேசுவது தான் பலருக்கும் இயல்பாக இருக்கிறது.

பிறந்த நிமிஷத்திலிருந்தே குழந்தைக்கும் துன்பம் ஏற்படுகிறது. தாயின் வயிற்றில் கைகால்களும் உடலும் அடக்கமாகக் காக்கப்பெற்றிருந்த சிசுவுக்கு ஜனனமாகி வெளியே வந்ததும், கைகால்களுக்கும் உடலுக்கும் ஆதாரமற்றதுபோன்ற ஓர் உணர்ச்சி ஏற்படுகிறது. இது துன்பமே. ஆகையால் குழந்தை அழுகிறது. உடலில் காற்றுப் படுகிறது; உடல் நடுங்குகிறது. இது ஸ்பரிசேந்திரியத்தில் ஏற்படும் ஒருவகைத் துன்பம்.

இதுவரையில் கண் திறவாத குழந்தை கண்ணைத் திறந்து பார்க்கிறது. ஒளி உணர்ச்சி உண்டாகிறது. அப்பொழுதுகூடச் சற்றே துன்பம் ஏற்படுகிறது. உடனே, கண்ணை மூடிக்கொள்கிறது. சுருங்கிக் கிடந்த வயிற்றில் பசித் துன்பம் எழுகிறது. அப்பொழுது

அதைத் திருப்தி செய்துகொள்ளத் தாயின் பாலை அருந்துகிறது. பாலுண்டு பசி தீர்ந்து இன்பம் அடைந்து நித்திரை செய்கிறது. இப்படியே ஒரு குழந்தை வளரும்பொழுது, சூழ்நிலைகளோடு சம்பந்தப்படுவதால் உண்டாகும் உணர்ச்சிகளால் துன்பமும், துன்பத்தை மேற்கொள்ளும் முயற்சியும், முயற்சியில் வெற்றி பெற்ருல் இன்பமும், வெற்றி பெருவிட்டால் துன்பமும் ஏற்படுகின்றன. இவ்வாறு துன்பங்கள் இன்பத்திற்கே காரணமாவதால் துன்பங்கள் பெரிதாகத் தோன்றுவதில்லை. துன்பங்களும், அவற்றைத் தவிர்ப்பதற்கான முயற்சிகளும், முயற்சிகளின் விளைவாக ஏற்படும் இன்பங்களும் மனத்தில் அநுபவங்களாகப் பதிகின்றன. இந்த அநுபவ முத்திரைகள் மேலும் மேலும் நிகழ்கின்ற செயல்களுக்குத் தூண்டுகோலாக அமைகின்றன. எந்த எந்த அநுபவங்களைப் பயன்படுத்திக்கொள்ள வேண்டும், எவற்றை மறக்க வேண்டும் என்பவைகளெல்லாம் அறிவாகவும், அறிவுத் தெளிவுகள் கூடிப் புத்தியாகவும் மாறுகின்றன.

இவ்வுலகமே ஓர் இன்ப நிலயம் எனலாம். தாவர உலகம் பல வகையான சுவையுள்ள கனிகளைத் தருகிறது. பறவைகளும் மிருகங்களும் தத்தம் பசிப் பிணியைத் தீர்த்துக்கொள்ளக் கனிகளை நாடி வருகின்றன. பல வகையான வர்ணபேதங்களோடு கூடிய மலர்கள் இனிய செந்தேனைத் தமக்குள் வைத்துக்கொண்டு வண்டு, தேனீ, எறும்பு முதலிய பிராணிகளைப் பரிந்து அழைக்கின்றன. தாவர உலகம் தம்மை நாடி வரும் பிராணிகளுக்குப் பசித் துன்பத்தைத் தீர்த்துத் தமது சந்தான விருத்தியையும் தேடிக்கொள்கிறதல்லவா? பழங்களைக் கொத்தித் தின்னும் பறவைகள் அந்தக் கனிகளின் விதைகள், தாய் மரத்திற்குப் போட்டியாகப் பக்கத்திலேயே முளைத்து வளராமல் தொலைவிலே விழுந்து முளைத்து வளரும்படி செய்கின்றன. தேனை

உண்ணும் பிராணிகள் மலர்களைச் சினைப்படச் செய்து உலகத்தில் காயும் கனியும் தோன்றும்படி செய்கின்றன. ஓர் உயிர் தன்னைச் சூழவுள்ள உயிர்களின் துன்பம் ஏதோ ஒரு வகையில் சமனமாகும்படி உதவுகின்றது என்பதும், தம் இனப் பெருக்கத்தையே நடுநாயக நோக்கமாகக் கொண்டிருக்கிறதல்லவா? இப்படியே பிரகிருதியில் எங்கே பார்த்தாலும் ஜீவராசிகள் தத்தம் சந்தானத்தைக் கண்டு இன்பம் அடையத் தாமே துன்பத்தை ஓரளவு அநுபவித்தும், ஓரளவு பிற உயிர்களின் துன்பத்தைத் தீர்க்க உதவி புரிந்தும் வாழ்வதைப் பார்க்கிறோம். பிராணி உலகத்தில் ஆணும் பெண்ணும் ஒன்றை ஒன்று நேசிப்பதெல்லாம் சந்தான உற்பத்தியை உத்தேசமாகக் கொண்டுள்ளது. இந்த ஆசை சிற்றின்பத்திற்கும், அச்சிற்றின்பப் பெருக்கமாகிய ஜீவப் பிரவாகம் இவ்வுலகத்தில் நித்திய காலமாக ஓடிக்கொண்டிருப்பதற்கும் காரணமாகின்றன. இப்படி ஆசைகளை நிறைவேற்றிக்கொள்வதற்காக வாழும் பிராணிகள் எப்படிப்பட்ட துயரங்களையும் துன்பங்களையும் அநுபவிக்க ஆயத்தமாக இருக்கின்றன.

சுகத்தையும் ஆனந்தத்தையும் தேடுவது மனிதனுக்கு இயற்கைக் குணம். இயற்கை, இவ்வுலகத்தில் எவ்விடத்திலும் பலவித ஆனந்தங்களை இதன் பொருட்டே தேடி வைத்திருக்கிறதோ என்று தோன்றுகிறது. இதையெல்லாம் ஆராய்ந்து பார்த்தால் இயற்கையின் கருத்துப் புலப்படும். யாவும் சந்தான அபிவிருத்திக்கேயாம். தாய், சினையாகி உதரத்தில் சிசுவைத் தாங்குகிற நாள் முதலாக அது ஜனனமாகும் வரைக்கும் அநுபவிக்கிற துன்பங்களும் வேதனைகளும் பல. தன் உயிரையே ஒரு பிள்ளையைப் பெறுவதற்காக இழந்துவிடவும் கூடும். பிறந்த பிள்ளையின் முகத்தைப் பார்த்தவுடனே, அநுபவித்த துன்பத்தை எல்லாம் தாய் மறந்துவிடுகிறாள். பெற்ற பிள்ளை தாய்க்கு அவ்

வளவு ஆனந்தத்தைத் தரக்கூடியது. சிசுப் பருவம் தாண்டி வாலிபம் அடைந்த காலத்திலும் பிள்ளைகள் தாய்க்கு ஆனந்தம் கொடுப்பவர்களே. மக்கள் வளர்ந்து, பேரன்; கொள்ளுப் பேரன் என்றெல்லாம் தம் இனம் பெருகி வாழ்வதைப் பார்க்கின்ற தாய்க்கு ஏற்படுகிற சந்தோஷத்திற்கு அளவே இல்லை. தாய் தன் தள்ளாமையையும் பொருட்படுத்தாமல் தன் சந்தானத்தின் க்ஷேமத்தை நாடுகிறாள்; அவர்களுக்காகவே உழைக்கிறாள்.

இவை யாவும் ஒரே விஷயத்தையே ஓலமிட்டுக் கூறுகின்றன. ஆம்; வாழ்வதற்கே உயிர்! 'உயிரோடு பிறந்து இவ்வுலகில் அகப்பட்டுக்கொண்டோம். இதை விட்டு எப்படியாவது ஓடிப் போக வேண்டும்' என்று நினைப்பவர்கள் ஆரோக்கியக் குறைவுள்ளவர்கள். இவர்கள் உலக வாழ்க்கையில் ஏற்படும் கஷ்டங்களைக் கண்டு பயப்படும் பயங்கொள்ளிகள்; கஷ்டங்களை வெல்லத் திராணியற்றவர்கள்; நெஞ்சில் உரமும் வீரமும் இல்லாதவர்கள். உலக வாழ்க்கையில் ஏற்படும் கஷ்டங்களை மேற்கொள்வதற்கு முதியவயதிலும் அதிக ஆற்றல் வேண்டும். மனத்திற்கு எக்காரணத்தாலும் பலக் குறைவு ஏற்படாமல் காக்க வேண்டும். அப்படிப் பலக் குறைவு ஏற்படுமானால், புத்தித் தெளிவு குறைந்து தற்கொலை செய்துகொள்ள எண்ணுவார்கள். ஒரு வேளை தற்கொலையே நிகழலாம். இவர்களை நோயாளிகளாகவே கருத வேண்டும். இவர்களுக்குத் தகுந்த சிகிச்சை செய்ய வேண்டும். முதுமை அடைந்த பிறகு அநேகர் மரணத்தைப்பற்றிச் சிந்திக்கத் தொடங்கி விடுவார்கள். உடம்பு பலவீனமடைந்து வாழ்விலே அன்றாடம் நிறைவேற்ற வேண்டிய கடமைகளைச் செய்யத் திராணி இல்லாதபோது, 'சாவு வரக்கூடாதா? இன்னும் உயிரோடு இருக்கிறேனே!' என்றெல்லாம் அநேகர் உதட்டளவிலே பேசுவது சர்வ சாதாரண

மாக இருந்தாலும், அந்தரங்கத்திலே, 'இன்னும் சிறிது காலம், இதையும் அதையும் செய்து முடிக்கிற வரைக்கும் உயிரோடு இருக்க வேண்டும்' என்று உண்மையிலே ஆசைப்படுவார்கள். உடலில் உள்ள ஒவ்வொரு ஜீவ-அணுவும் உயிரைக் காப்பதற்கான முயற்சியை ஓயாமல் செய்துகொண்டிருக்கும். முதுமை அடைந்து உடல் முழுவதும் தளரும்பொழுது, ஒவ்வொரு ஜீவ அணுவும் நிலமாகிச் சடலோகத்தின் அம்சமாக மாறுவதையே விரும்பும். இந்த நிலைமைக்கு வந்த பிறகும், இவர்கள் மரணம் வரலாகாதா என்று வாய் வளமாகப் பேசின போதிலும், அந்தரங்கத்தில், 'இன்னும் கொஞ்ச காலம் குடும்பத்திற்காக உழைக்க வேண்டும்' என்ற ஆசை தான் கொண்டிருப்பார்கள். 'பிராணன் போகாதா? துயரம் தீராதா?' என்று சொல்லுகிற எந்த நோயாளியும் தன் நோய் தீர்க்கும் மருந்து ஒன்று இருப்பதாகக் கேள்விப்படுவானாகில் உடனே நோய் தீர்ந்து உயிரோடு வாழலாம் என்றுதான் ஆசைப்படுவான். நோயினால் வருந்துபவர்கள்கூட மரணத்தைத் தேடாமல் நோய் தீர்க்கும் பரிகாரங்களையே நாடுவார்கள். ஆண் பெண் இருபாலாரிலும் சிலர் உலகவாழ்க்கையில் தங்களுக்கு ஏற்படும் கஷ்டங்களைச் சகிக்க முடியாமல், 'உயிரோடு இருப்பதில் பயனில்லை' என்று ஓயாமல் பல்லவி பாடிக்கொண்டே தங்கள் சந்ததிக்காக மேலும் மேலும் செல்வத்தைத் தேடுவதிலேயே நாட்டமாக இருப்பார்கள்.

இதுவரைக்கும் இந்தப் புத்தகத்தில் ஆராய்ந்தவற்றையெல்லாம் ஆதியோடு அந்தமாக மனனம் பண்ணிப் பார்த்தால், 'இறப்பதற்கு அன்று உயிர்' என்பதும், 'வாழ்வதற்கே உயிர்' என்பதும் உள்ளங்கை நெல்லிக்கனியெனத் தெளிவாகும். பாலாவஸ்தை தாண்டிக் கௌமார தசை அடைந்து சுதந்தரமாக வாழும்போது, க்ஷேமமாகவும் சந்தோஷமாகவும்

வாழ்வதற்குத் தேவையான வசதிகளைத் தேடிக் கொண்டு சமூக நன்மையை உத்தேசித்து வாழ்க்கைக் கர்மங்களை நிறைவேற்ற வேண்டும். உலக வாழ்க்கையிலிருந்து கிடைக்கக்கூடிய இன்பங்களையெல்லாம் இயற்கைச் சட்டங்களை மீறாமல் அநுபவித்து, வாழ் நாட்களில் பெருகிவரும் அநுபவ ஞானத்தையெல்லாம் வருங்காலத்துச் சந்ததிகளில் பிரகாசிக்கும்படி செய்து, நம்முடைய சந்ததியின் உன்னத வாழ்க்கையிலே நாம் நித்தியகாலமாக விளங்குகிறவர்களாய் நாட்களைச் செலவிடுவதே பிறவிப் பயன்.






